# மார்ஷல் ஸ்டாலின்

ர. அ. கபூர்
இயற்றியது




அல்லயன்ஸ் கம்பெனி
மயிலாப்பூர் :: சென்னை

 1944 0-12-0

# பொருளடக்கம்




தி ஜுபிடர் பிரஸ் லிமிடெட்
சென்னை. - 1944—131011

# மார்ஷல் ஸ்டாலின்

## I

## முதல் களப் பலி

"சோற்றுப் போர்தான் ஸோஷலிஸப் போர்."

— லெனின்

வெள்ளியை நிகர்த்த உறைபனியால் தன் கோர சொரூபத்தை மறைத்து, நீண்டு வளர்ந்து நிற்கும் காகஸஸ் மலைத் தொடரிலுள்ள ஒரு மாபெரும் பள்ளத்தாக்கின் ஊடே உருண்டு புரண்டோடுகிறது குரா நதி. கருங்கடலின் கரையோரங்களில் மலை நீரோட்டமாக உருவங் கொள்ளும் குரா, காஸ்பியன் கடலில் போய்க் கலந்துவிடுகிறது. பளிங்கை யொத்த தெளிந்த நீரும், மிதமிஞ்சிய மச்சக் கூட்டங்களும், ஒன்றுசேர்ந்து அழகுதரும் மேலைப் பிராந்திய நீரோட்டத்தை 'முத்து நதி' எனப் பெயர் பெறச் செய்கின்றன. முத்து நதியின் இடது பாரிசத்தில், உயர்ந்த மலைத்தொடர்களால் சூழப்பெற்ற சமவெளிப் பிரதேசத்தில், சிறிய குன்று ஒன்று காணப்படுகின்றது. அக்குன்றின் உச்சியிலே பழங்காலப் பாழுங்கோட்டை

ஒன்று தென்படும். அதன் அடிவாரத்தில் அமைந்திருப்பதுதான் கோரி என்ற கிராமம். இதுவே நமது பாட்டாளி பங்காளரான ஸ்டாலினுடைய பிறப்பிடம்.

நீர்வளம், நிலவளம் பொருந்திய பள்ளத்தாக்கில் வாழும் மக்களுக்குத் தேவைப்படும் ஆகாரப் பொருள்களுக்குப் பல நூற்றாண்டுகளாய்ப் பஞ்சம் ஏற்பட்டதே இல்லை. ஆகவே, அவர்கள் வாழ்க்கை மிக்க சாந்தமாகவும், சுபிட்சமாகவும் நடந்து வந்ததால், இயற்கை அரணாகத் தமக்கு அமைந்துள்ள மலைத்தொடர்களுக்கு அப்பாலுள்ள உலகத்தைப்பற்றி அவர்கள் சிந்திப்பதற்கு அவசியமே ஏற்பட்டதில்லை.

பொறாமை கொண்ட ஆக்கிரமிப்பாளரின் கண்களிலிருந்து செழுமை மிக்க இப்பள்ளத்தாக்குகளைப் போதிய உயரமில்லாத மலைகளால் மறைக்க முடியுமா? ஆகவே, கிரேக்கர், ரோமர், யூதர், பாரசீகர், துருக்கியர், ரஷ்யர் ஆகியோர், ஒருவர் பின் ஒருவராகப் படையெடுத்து வந்து, விளைபொருள்களைக் கொள்ளையிட்டு, நிலங்களைத் தரிசாக்கிச் சென்றனர். அலெக்ஸாந்தர், செங்கிஸ்கான் முதலியோரின் படைகள் மலைகளைக் கடந்தன. மொகலாயத் தைமூரின் நாடோடிக் கூட்டம், ஜார்ஜிய மாகாணம் முழுவதையும் கொள்ளையடித்தது. உலகத்திலேயே அழகிகள் எனப் புகழ்பெற்ற காக்கேஸிய மோகினிகளைத் தமது அந்தப்புர அணங்குகளாக்கிக் கொள்ளப் பாரசீகரும், துருக்கியரும் மாறி மாறிப் பன்முறை படையெடுத்தனர். விவசாயிகளைச் சுரண்டவும், இயற்கைச் செல்வங்களைக் கைப்பற்றவும் இறுதியாக முனைந்தது ரஷ்ய ஏகாதிபத்தியம்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில், ஐரோப்பிய - ஆசியாக் கண்டங்களைச் சேர்ந்த பல தேச இனத்தவர் ஜார்ஜிய மாகாணத்தில் வசித்தனர். மக்களின் பொருளாதார வாழ்வில் காணப்படும் உயர்வு தாழ்வுகளைக் களைவதற்கென்றே உழைத்து வரும் "சர்வ தேசியவாதி" ஒருவன், அவ்வேற்றுமைகள் இங்கு மலிந்து காணப்படுவதைப்போல உலக நிலப்பரப்பில் வேறு எங்கும் காண முடியாது.

ரஷ்ய ஏகாதிபத்தியத்தின் வருகையே ஸ்டாலினின் பிற்கால வாழ்க்கையை ஒரு ஸோஷலிஸ்டாகச் செய்ததென்று கூறலாம். நிலக்கரிப் பொருள்கள், மாங்கனீயம், பெட்ரோலியம் போன்ற உயர்ந்த மூலப்பொருள்களைத் தங்கு தடை இல்லாமல் வசதியாகச் சுரண்டிச் செல்வதற்கு ஏற்ற இருப்புப் பாதைகளை ரஷ்ய சர்க்கார் அமைத்தது. இதனுல் ஜார்ஜிய மக்களின் பொருளாதார சமூக அமைப்பு, கடுமையாய் க்ஷீணிக்கத் தொடங்கிற்று. அண்டை நாடுகளை அறியவிடாமல் ஜார்ஜிய எல்லைகளை எந்த மலைத் தொடர் ஓரளவு காத்துவந்ததோ அதை, ரெயில் அமைப்புக்குத் தடையாய் இருக்கும் பகுதியில் ரஷ்ய ஏகாதிபத்தியம் முதன்முதலாகத் துளைக்க ஆரம்பித்தது. இக் கொடுமை அத்தேசத்தாரின் குறுகிய தேசாபிமானத்தையுங்கூடக் குலுக்கத் தொடங்கிற்று. இது போதாதென்று, தொழிற்சாலைத் தொழிலாளர், சுரங்கத் தொழிலாளர் ஆகியோரின் எண்ணிக்கை பெருகப் பெருக, கிராமாந்தர வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட சமூகப் பொருளாதார அமைப்பும் மாறித்தான் தீரவேண்டுமென்ற நிர்ப்பந்தமும் ஏற்பட்டது. சுருங்கக் கூறினுல், பாட்டாளிகளின்

ஸோஷலிஸ்ட் சர்வாதிகாரப் புரட்சிக்கு இதுவே அஸ்திவாரம் இட்டது எனவும் உறுதியாகக் கூறலாம்.

ரஷ்ய ஏகாதிபத்திய ஆக்ரமிப்பு, பலவந்தமாக எல்லாவற்றையும் ரஷ்ய மயமாக்கல், பரம்பரைக் கிராம வாழ்க்கையைச் சிதைத்துத் தொழில் நாடாக மாற்றல், ஒற்றுமைக்கு வழி பிறக்காதா என ஏங்கி நிற்கும் நிம்மதியற்ற வாலிபப் பாட்டாளிகளின் தவிப்பு ஆகிய சூழ் நிலைகளைக் கண்ட ஆர்மீனியர், தார்த்தாரியர், துருக்கியர், யூதர் முதலான பல தேச இனத்தவரான ஜார்ஜிய தேசாபிமானிகளின் ஹிருதயங்களில் கார்ல் மார்க்ஸின் போதனைகள் காட்டுத் தீயைப்போல் பரவின. மின்சார சக்திபெற்ற இப்போதனைகள், கொத்தித் திருத்தி உரம் இட்டுப் பண்படுத்திய சாகுபடி நிலங்களுக்கொப்ப, ஜார்ஜிய மக்களைப் பக்குவப்படுத்தின. ஆங்காங்கே காற்றில் ஊசலாடிக்கொண்டிருந்த ஸோஷலிஸ வித்துக்கள், பண்படுத்தித் தயாராயிருக்கும் மானிட ஹிருதய பூமியில் முளைக்கத் தொடங்கின. இவற்றை முறைப்படி வளர்த்து, கிளைத்துக் காய்த்துப் பழுத்துப் பலன் தரச் செய்வதற்கேற்ற ஒரு விவசாயியைக் காலம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. இதுவே அக்கால ஜார்ஜிய மக்களின் வாழ்க்கைச் சித்திரம்.

1879-ஆம் வருஷம், டிஸம்பர் மீ, 21-ஆம் தேதி (ஜாரின் ரஷ்யப் பஞ்சாங்கப்படி நவம்பர்-1உ) கோரி என்ற ஊரில்,* ஒரு சிறிய குடிசையில் விஸ்ஸாரியோனோவிக் ஜுகாஷ்வில்லி என்ற பூட்ஸ் தைக்கும் தொழிலாளியின் மனைவி காதேரின் ஜுகாஷ்வில்லி என்ற குடியான மாதுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைதான் ஜோஸப்

விஸ்ஸாரியோனோவிக் ஜுகாஷ்வில்லி எனப் பெயரிடப் பெற்ற பிற்கால 'உருக்கு மனிதனான' ஜோஸப் ஸ்டாலின் ஆகும். இத்தம்பதிகள் பெற்ற மற்றக் குழந்தைகள் குழவிப் பருவத்தில் இறந்துபோனபின், எஞ்சி நின்ற பிள்ளை ஸ்டாலின் ஒருவரேயாகும். ஜார்ஜியாவின் தலைநகரான டிப்லிஸில் உள்ள அடெல்கனெப் என்ற பூட்ஸ் தொழிற்சாலையில் வேலை பார்த்து வந்த இவர் தந்தை, இவரது பாலப் பருவத்திலேயே காலகதி அடைந்துவிட்டார். ஆகவே, ஸ்டாலினை வளர்த்தல், பள்ளிக்கனுப்புதல் போன்ற காரியங்களை நடத்தி வைக்கவேண்டிய பொறுப்பு முழுதும் அன்னை காதெரின் தலையிலே விழுந்தது. அன்னை தெய்வபக்தியிற் சிறந்த கிறிஸ்தவ மாது. ஆதலின், ஸ்டாலினுடைய பிற்காலம் மாதாகோவில் ஊழியத்தில் (மதப் பிரசாரகராகக்) கழியவேண்டும் எனக் கருதி, அவரை எட்டாவது வயதில் ஓர் ஆரம்பப் பள்ளிக்கூடத்திலும், ஐந்து ஆண்டுகள் அங்கே படித்தபின் டிப்லிஸிலுள்ள வேத சாஸ்திரக் கல்லூரியிலும் சேர்த்தார். அங்கே, உயர்தரக் கல்வியையும், கிரேக்க வைதிக மாதாகோவில்களின் வேத சாஸ்திரங்களையும் ஸ்டாலின் கற்றுவந்தார். படித்துக்கொண்டும் தர்க்கித்துக்கொண்டும் இருப்பதுதான் அவரது பள்ளிப் பருவத்தின் குறிப்பிடக்கூடிய அம்சங்கள். கீழ்ப்படிதலும் நற்குணமும் வாய்ந்த சற்புத்திரன் என அன்னையால் அவர் புகழப்படுவதுண்டு. அன்பு மிகுதியால் 'ஸோஸோ' என்ற செல்லப் பெயரிட்டு அவரை அன்னை அன்பாக அழைத்து வந்தார்.

அவருடைய தந்தையிடம் பழுதுபார்க்க வரும் பூட்ஸ்களில், பணக்காரரின் பூட்ஸ்களுக்கும் ஏழைகளின் பூட்ஸ்

களுக்கும் பெரிய வித்தியாசங்கள் இருப்பதைக் காணும் ஸோஸோவின் மனம், புழுக்கங்கொண்டு புழுவாய்த் துடிக்கும். இது அவரது குழந்தைப் பருவத்திலேயே இயற்கையாய் அமைந்த குணங்களில் ஒன்று. அவரது பெயரைப்பற்றிய இன்னொரு அதிசயக் கதையும் உண்டு. அதாவது, தம்மையொத்த தோழருடன் விளையாடும் பொழுது தம்மை, 'உருக்காலானவன், உருக்காலானவன்' எனக் கூறிக் கொள்வாராம். தோழர்கள் அவரை ஸோஸோ என்றும், கோபா என்றும் அழைப்பார்கள். ஸ்டாலின்-உருக்கு மனிதன்-என்ற பெயர், எஃகு போன்ற அவரது நேர்மையான நடத்தைக்காகக் கௌரவப் பட்டமாக லெனினால் வழங்கப்பட்டது. நெடுங்காலம் கோபா-ஸ்டாலின் என்றே அவரை அழைப்பது வழக்கம்.

ரெயில்வே தொழிற்சாலைகளில் வேலை செய்யும் ஆயிரக் கணக்கான தொழிலாளர் நிறைந்த டிப்லிஸ் நகரம், கம்யூனிஸத்தின் தாயகமாகத் தொடங்கியது. வேத சாஸ்திரக் கல்லூரி அதிகாரிகளால் இச் சுற்றுணர்ச்சிகளிலிருந்து தம் மாணவர்களைத் தடுக்க முடியவில்லை. மேலும், கிறிஸ்தவ வேதங்களைத் தாங்கிய இளங் கரங்கள், கார்ல் மார்க்ஸின் தத்துவ சாஸ்திரங்களை ஏந்தத் தொடங்கின. வேத சாஸ்திரக் கல்லூரிக்கு வெளியே கள்ளத்தனமாய்ப் பயந்து பயந்து படித்துவந்த மார்க்ஸீய வேதம், பள்ளிக்குள்ளும் வெகு தாராளமாய் இடம் பெற்று விட்டது. பள்ளி அதிகாரிகளோ, தம் பிற்காலக் குருத்துவத்திற்கே சாவு மணி அடிக்க ஆரம்பித்துவிட்டதாகக் கருதி அஞ்சினர். ஆகவே, மாணவரில் யாராவது ஸோஷலிஸப் புத்தகங்களைப் படித்தாலும், அதன் தத்துவ அறிக்கைகளை

விநியோகித்தாலும் கல்லூரியிலிருந்து வெளியேற்றப்படுவர் என்ற முதலாவது அடக்குமுறைப் பிரகடனத்தை அதிகாரிகள் வெளியிட்டார்கள். சிறிது காலத்திற்குப் பிறகு ஸோஸோவிடம் 'தடுக்கப்பட்ட' புத்தகங்கள் இருப்பதைக் கண்டுபிடித்துக் கல்லூரிக்கு வெளியே 'கல்தா' கொடுத்து அனுப்பிவிட்டனர். இவ்வாறு ஸோஸோ முதல் களப்பலியானார். இறுதியாக, பள்ளித் தோழர் கூட்டாலோசனைப்படி, ஸோஷலிஸ இயக்கத்தைப் பரப்புவதில் அவருக்குத் துணைபுரிவதற்காக ஒத்த மனப்பான்மை கொண்ட வேறு சில மாணவரின் பெயர்களைக் கல்லூரி அதிகாரிகளிடம் ரகசியமாய் அவர் கூறவேண்டுமென்று முடிவுசெய்யப்பட்டு, அந்தத் திட்டப்படி ஸோஸோவும் நிறைவேற்றி வைக்கவே, எதிர்பார்த்தவாறு சிலருக்கு வெளியேற்றமும் கிடைத்தது.

கல்லூரியிலிருந்து வெளிவந்ததும், ஸோஸோ வான மண்டல ஆராய்ச்சிக் கூடத்தில் குமாஸ்தாவாக அமர்ந்தார். 'சமூக ஜனநாயகக் கட்சி'யின் டிப்லிஸ் கிளையில் தாம் சேர்ந்திருந்துங்கூட, குமஸ்தா உத்தியோகத்தில் சிறிதும் ஓய்வில்லாதிருந்ததால், கட்சிக்குரிய தம் பணியைச் செய்ய இயலாதிருந்தார். ஆனால், கட்சி என்ன செய்கிறது, எவ்வாறு பிரசாரம் புரிகிறது என்பவற்றைக் கவனிப்பதற்கு மட்டுமே நேரம் இருந்தது. எனினும், அங்கு நடந்து வரும் சம்பவங்கள் அவரை இருக்கவிடவில்லை. இறுதியில் கட்சி அவரைத் தன்னுள் இழுத்துக்கொண்டது.

1900-ஆம் வருஷம், மே முதல் தேதியன்று டிப்லிஸ் ரெயில்வே தொழிலாளர், 'தொழிலாளர் தின'த்தைக் கொண்டாட வேலை நிறுத்தம் செய்தனர். அடுத்த வருஷ மே தினக் கொண்டாட்டம், கோஸக் குதிரைப் படையால்

கலைக்கப்பட்டுப் பல உயிர்களைப் பலி கொடுப்பதில் முடிந்தது. பிறகு, ஸோஸோவின் அறை போலீஸ் சோதனைக்கு உட்பட்டது. ஜார் ஆட்சிக்கு விரோதமாய்த் திரண்டு வரும் ஸோஷலிஸ எதிர்ப்புச் சக்திகளை, அரசாங்கம் தன் பலங்கொண்ட மட்டும் அடக்கத் தொடங்கியது. எனவே, ஸோஸோ குமாஸ்தா பதவியிலிருந்து விலக்கப்பட்டார். இனி, அவர் மனத்துக்குகந்த வேறு வேலை எது? ஆகவே, அவர் புரட்சியையே தொழிலாகக்கொண்டு, தம் முழு நேரத்தையும் கட்சி ஊழியத்திற்கு அர்ப்பணம் செய்தார்.

டிப்லிஸ் ஸோஷலிஸ்ட் இயக்கம் ஸோஸோவைத் திட்டமான புரட்சிப் பணியில் இழுத்துக்கொண்டது. **1926**-ஆம் வருஷம் அவர் நிகழ்த்திய சொற்பொழிவில், "இங்கே (டிப்லிஸில்), தோழர்களின் மத்தியிலே, புரட்சிக் கனலிற் கனிந்த முதலாவது ஞான ஸ்நானத்தைப் பெற்றேன். இங்கே, இத் தோழர்களின் மத்தியிலே, புரட்சியின் ஆரம்பப் பயிற்சியைப் பெற்றேன். என் பிரதம ஆசிரியர்கள் டிப்லிஸ் தொழிலாளர்கள்தான் என்பதை நீங்கள் அறிவீர்கள்......டிப்லிஸ் தொழிற்சாலைகளிலுள்ள ஆதித் தொழிலாளரின் மாணாக்கனாய் இருந்தேன் - இன்னும் இருக்கிறேன்" என்று குறிப்பிட்டார்.

ஆபத்துக்கள் மிகுந்த புரட்சித் தொழிலுக்கு மிக அவசியமான சுழல் துப்பாக்கி உபயோகித்தல், வெடிகுண்டு எறிதல் போன்ற அப்பியாசங்களை ஆரம்பப் பயிற்சியாக ஸோஸோ கற்றுக்கொண்டார். ருஷ்ய ஆட்சியை எதிர்த்து ஜார்ஜியாவில் நடைபெறும் தேசீய வழிப்பறிகள் சர்வ ஜன சம்மதம் பெற்ற சம்பிரதாயங்களாக நிகழ்ந்து

வந்தன. கட்சியின் மூல நிதிக்காக இவ்விதக் காரியங்களை ஸோஸோவும் அவர் தோழர்களும் மேற்கொண்டனர். 'பொயெவிகி' எனப் பெயரிட்டுக்கொண்ட கம்யூனிஸ்ட் பயங்கரவாதிகள், தம்மைப் பல பிரிவுகளாக வகுத்துக் கொண்டு, பாங்குகளையும் பெரிய பணக்காரர்களையும் கொள்ளையிட்டனர். சர்வ ஜன உபயோகத்துக்காகத் தன வந்தரிடமிருந்து 'எடுத்துக்கொள்வது' என்ற தத்துவத்தின் பேரில், அவ்வியக்கம் நிறுவப் பெற்றிருந்தது. எனவே, 'எடுத்துக்கொள்வோர்' என்று சுருக்கமாக அவர்கள் அழைக்கப்பட்டனர்.

'எடுத்துக்கொள்வோர்' இயக்கத் தலைவர் என்ற ஹோதாவில் ஸோஸோவுக்கு அந்நகரவாசி காமோ பெட்ரோஸ்யன் என்பவரோடு பரிசயம் ஏற்பட்டது. போல்ஷெவிக் புரட்சி மாணவரில் இவரை அறியாதவர் இருக்க முடியாது. இவரைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் தெரிந்து கொள்வோம்.

## II

## மறு களப் பலி

'நான் அதில் அன்புகொண்டிருக்கிறேன் என்பதற்காக மாத்திரம் ஸோஷலிஸம் எனக்கு ஒரு பொருளாதார ஸித்தாந்தமாக இருக்கவில்லை; அஃது ஒரு ஜீவனுள்ள கோட்பாடு என்பதற்காக அதை என் சிரசாலும் உள்ளத்தாலும் ஏற்றுக்கொள்ளுகிறேன்.'

— ஜவாஹர்லால் நேரு

**1907-ஆம்** வருஷம், ஜூன்மீ 26-ஆம் தேதி வேனிற்கால நாள் ஒன்றின் வெது வெதுப்பான காலை

வேளையில், குர்துமோவ் என்பவன் டிப்லிஸ் நகரப் போஸ்டாபீஸிலிருந்து வெளியே வருகிறான். குதிரை பூட்டிய, நாற்புறமும் திறந்த கோச்சு வண்டி அவனுக்காகக் காத்து நிற்கிறது. அவனுக்கும் கோச்சுக்கும் காவல்புரிய 'கோஸக்'* குதிரைப் படைவீரர் அவன் வருகையை எதிர் பார்க்கின்றனர். அவன் யார்? இந்தத் தடபுடல் ஏன்? கவனிப்போம். குர்துமோவ் சர்க்கார் கஜான்ஜி; ஸெயின்ட் பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து அனுப்பப்படும் கஜானாவைப் போஸ்டாபீஸிலிருந்து பெற்று டிப்லிஸிலுள்ள அரசாங்க பாங்கில் செலுத்தவேண்டியது அவன் பொறுப்பு. அவனுக்கும், பணத்துக்கும், வண்டிக்கும் சேர்த்துப் பந்தோபஸ்து செய்யத்தான் இக் குதிரைப்படை நின்றது. கோச்சு வண்டியில், மடிமீது பணப்பையை வைத்துக் கொண்டு, காவலரின் பாதுகாப்பை நம்பிக்கொண்டு, கஜான்ஜி கவலையற்று வசதியான இருக்கையில் உட்காரவும், வண்டி மெல்ல நகருகிறது. நாற்புறமும் கோஸக் குதிரைப் படை வீரர் புடைசூழ, வண்டி அதிவேகமாய்க் கிளம்பிற்று. பையிலோ மூன்று லட்சத்து நாற்பத்தேழாயிரம் ரூபிள்† நோட்டுகள் இருக்கின்றன.

எரிவன் சதுக்கம். குர்துமோவின் வருகையை பாட்ஸ்யா கோல்டவா இமைகொட்டாது ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் அவள், அவன் காதலியல்ல; தேசபக்தப் பாட்டாளரின் காதலி. கண்டுவிட்டாள் அவன் வருவதை! குதிரைகள் கிளப்பும் தூசியோ

* கோஸக்-ஒரு வகுப்பினர்; ரஷ்ய ராணுவத்தில் இந்த வகுப்பார் அதிகம்.

† ரூபிள்-ரஷ்ய நாட்டு வெள்ளி நாணயம்.

ஆகாய மண்டலத்தை முட்டுகிறது. சதுக்கத்தின் மறு கோடியில் நிற்கும் தன் தோழி அன்னெட் ஸாலாம் லிட்ஸ் என்பவளுக்குச் சமிக்ஞை செய்துவிடுகிறாள். இவ்வளவும் மின்னல் வேகத்தில் முடிந்து விடுகிறது. அன்னெட் பக்கத்து ஹோட்டலுக்குள் மெதுவாகப் பிரவேசித்துத் தன் தோழர்களுக்கு அறிவிக்கிறாள். பார்ப்பவர் சந்தேகங் கொள்ளாதபடி ஒவ்வொருவராய்த் தத்தமக்கேற்பட்ட ஸ்தலங்களை அடைகின்றனர். அவர்களில் ஒருவன் சதுக்கத்தில் பத்திரிகை வாசிக்கத் தொடங்கி விடுகிறான். இது, அவன் தன் வேலையில் இருப்பதற்கான அறிகுறி.

சிறிது நேரத்தில் குர்துமோவின் கோச்சு, ஜன நெருக்கம் மிகுந்த சதுக்கத்தில் பிரவேசித்து, பாங்கை நோக்கித் திரும்பிய உடனே, கோச்சைக் குறிவைத்துப் பல திசைகளிலிருந்தும் வெடிகுண்டுகள் பாய்ந்தன; சதுக்கமோ அல்லோலகல்லோலப் பட்டது! குண்டுகள் வெடிக்கும் சப்தம் காதுகளைச் செவிடுபடச் செய்தது! சிதறும் வெடித் துணுக்குகள் சிட்டுக் குருவியைப்போல் பாய்ந்தன! புகை ஆகாயத்தை மண்டிக் கண்களை மறைத்தது. இதுவே அந்நேரக் காட்சி. எதிர்பாராத இச்சம்பவத்தால் கோஸக் வீரர் தம் மதியையும் குதிரைகளை அடக்கும் சக்தியையும் இழந்தனர். சிலர், குதிரைகளிலிருந்து தலைகுப்புறத் தூக்கி எறியப்பட்டார்கள். வேறு சிலரைக் குதிரைகள் முதுகில் சுமந்தவண்ணமே பைசாச வேகத்தில் தம் போக்குப்படி பறந்தன. குர்துமோவ் கோச்சுக்கு வெளியே எறியப்பட்டான். ஆனால், அந்தக் கனத்த பை கோச்சிலேயே கிடந்தது. இதை அறிந்த அக் கூட்டத்தார், வண்டியை வளைத்து நின்று, சுழல் துப்பாக்கிகளால்

குதிரையை நோக்கிச் சுட்டனர். குதிரை உணர் விழந்து அந்த வட்டத்தை ஊடுருவி வண்டியை இழுத்துச் சென்றது. கனத்த பை கைக்கெட்டாமல் போகப் போகிறதை அறிந்த கௌரவமான உடை தரித்த ஒருவன், குதிரையைக் குறிவைத்து ஒரு வெடியை வீசினன். மறு விநாடியே குதிரை செத்து விழவும், வண்டியும் நின்றுவிட்டது. எறிந்தவனும் குண்டு வெடித்த அதிர்ச்சியால் செந்தூக்காய்த் தூக்கித் தரையில் அறையப்பட்டான். நோவைப் போக்க நேரமுண்டா? அந்தப் பையை இழந்துவிட மனந்தான் வருமா? என் செய்வது? மெல்ல மெல்ல ஊர்ந்து சென்று அவன் மாயமாய் மறைந்து விட்டான். இக் குழப்பத்தால் சுமார் மூன்றரை லட்சம் ரூபிள் சென்ற இடம் துலங்கவில்லை. மூன்று கோஸக் குதிரை வீரர் செத்தனர்; ஐம்பதுக்கு அதிகமான ஜனங்கள் காயமடைந்தனர். இது 'பொயெவிகி'க்ளின் ஏற்பாடாக இருக்கலாமோ என்று பேசிக்கொள்ளப்பட்டது.

பட்டப்பகலில் நடைபெற்ற 'டிப்லிஸ் கொள்ளை'யின் விவரங்களையும், பறிபோன நோட்டுக்களின் எண்களையும் செய்திப் பத்திரிகைகள் கொட்டை எழுத்தில் பிரசுரித்தன. இந்த நோட்டுக்களை மாற்றுவதற்குக் கொண்டு வருபவரை உடனே கைது செய்யும்படி ஐரோப்பாவிலுள்ள சகல பாங்குகளுக்கும் சர்க்கார் உத்தரவிட்டது. சிறிது காலம் சென்றபின் லீட்னேவ் பாரிஸிலும், காமோ பெட்ரோஸ்யன் பெர்லினிலும், வேறு சிலர் ஸ்டாக்ஹோம், மியூனிச், ஜெனிவா முதலிய இடங்களிலும் கைது செய்யப்பட்டார்கள். கைதியான யாவரும் ரஷ்யப் போல்ஷெவிக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்று இறுதி

யாக வெளியாயிற்று. ஸ்டாலினது புரட்சி மனப்பான்மை யின் 'யோக்கியமான' முடிவினுல் டிப்லிஸில் நடை பெற்ற இப் பெருங் கொள்ளை விளைந்தது என்று போல்ஷெவிக் விரோதி டிராட்ஸ்கி ஒரு கட்டுரை எழுதினர்.

ரஷ்ய - ஜப்பானிய யுத்தத்திற்குப் பின் நடந்த புரட்சி தோல்வியுற்ற பிறகு, கம்யூனிஸ்ட் கட்சியை நடத்து வதற்குப் போதிய பணம் இல்லாதிருந்தது. ஆகவே, கட்சிக்கு நிதி திரட்ட லெனின், கிராஸ்லின், போக்டனேவ் ஆகிய மூவர் அடங்கிய கமிட்டியைக் கட்சி நியமித்தது. அச்சமயம், ஸ்டாலினும், தம்மால் இயன்ற அளவில் ஜார்ஜியாவிலிருந்து நிதி திரட்டித் தருவதாக ஏற்றுக் கொண்டார். இக் கொள்ளையோ சுயநலத்திற்காக அல்லாமல், கட்சி நலத்திற்காகவே நடத்தப்பட்டது என்றுலும், இதில் சம்பந்தப்பட்டவர்களை லெனின் மிகவும் வன்மையாகக் கண்டித்தார்.

இக் கொள்ளையை நடத்துவதில் எந்த அளவுக்கு ஸ்டாலின் ஈடுபட்டிருந்தார் என்ற விஷயம் ஒருபுற மிருக்க, திட்டம் போடுதல், தகுந்த ஆட்களைப் பொறுக்கு தல் போன்ற காரியங்களில் அவரைப்பற்றிச் சிறிது சந்தேகம் ஏற்பட்டாலும், மருண்டு ஊடுருவிச் சென்ற வண்டிக் குதிரையை ஒரே வெட்டில் பிணமாக்கிய கௌரவ உடை தரித்திருந்த மனிதனைத் தேர்ந்தெடுத்தது அவரேயாகும். அந்த மனிதன்தான் காமோ பெட்ரோஸ் யன். குறித்த வேலைக்கேற்ற சரியான ஆளைத் தேர்ந் தெடுக்குந் திறமை அவர் நுட்ப மதியையும் தெளிந்த அறிவையும் விளக்குவதாகும். இயற்கையாய் அமைந்த

இக் குணங்களே பிற்காலத்தில் அவரை ஒரு மாபெரும் ராஜதந்திரி யாக்கின எனத் திட்டமாகக் கூறலாம். காமோ ஒரு சாதாரண மனிதர் எனச் சொல்வது மிகப் பொருத்தமுடையது. ஆனால், ஸ்டாலினோடு இடைவிடாது அவருக்கு ஏற்பட்ட தொடர்பே அவரை வீர தீரப் பெருஞ் செயல்கள் புரியத் தூண்டிற்று.

காமோ, கோரியில் பிறந்த ஓர் ஆர்மீனியர். அவர் இளமையிலேயே தேசத் தொண்டில் ஈடுபட்டவர். வழிப் பறிகளையும், பாங்கிக் கொள்ளைகளையும் அஞ்சாது, மிகத் துணிவாக, விவேகத்துடன் நடத்துவதில் புகழ்பெற்றவர். ஆகவே, தலை மறைவாய் நிறைவேற்றக்கூடிய காரியங்கள் அனைத்தும் அவர் பொறுப்பிலேயே விடப்பட்டு வந்தன. அவரும், அவரைப்போன்ற விசேஷ குணங்களுடைய அவரது தோழர் கோட் என்பவரும் துணிந்து கொள்ளையிடுவதில் பிரசித்தி பெற்றவர்கள்.

டிப்லிஸ் கொள்ளை காமோவின் பராக்கிரமச் செயல்களில் தலைசிறந்தது. இச் சம்பவத்திற்குப் பிறகு அவர் பெர்லின் பாங்கைக் கொள்ளையிடச் சென்றார். அங்கே கைதியாகி விசாரணைக்கு அனுப்பப்பட்டார். போலீஸிடம் அகப்பட்டுக்கொண்டாலென்ன? தம்மை மீட்டுக் கொள்ள அவருக்குப் பல வழிகள் தெரியும். ஆகவே, மூளைக் குழப்பக்காரரைப்போல் நடிக்கத் தொடங்கி விட்டார். ஜெர்மன் ரஷ்ய பாஷைகளை அறியாதவர் போல் நடித்து, உலகத்திலில்லாத பாஷைகளில் பேசலானார். இந்தச் செப்படி வித்தைகளில் ஜெர்மன் போலீஸார் ஏமாந்து விடுவாரா? நகக் கண்களில் ஊசிகளை ஏற்றினர், பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பிகளால் சூடு

போட்டனர். இந்தத் தண்டனைகளும், இவற்றிலும் கொடிய சித்திரவதைகளும், புரட்சிக் கலையின் ஆரம்ப அப்பியாசம் என்று அன்றே தீர்மானித்துப் புரட்சியில் இறங்கியவர், இன்று இவற்றிற்கு அஞ்சுவாரோ? ஆகவே, நெளியாது சுளியாது சிரித்துச் சிரித்துத் தண்டனைகளை ஏற்றுக்கொண்டார். இம்மட்டோடு விட்டாரார்? உண்ணவும் உடுக்கவும் மறுத்து, உடுப்புக்களைக் கிழித்தெறிவார். ஒருமுறை தம் தொண்டையை அறுத்துக்கொள்ளவும், மறுமுறை தூக்கிலிட்டுக் கொள்ளவும் முற்பட்டார். போலீஸாரால் இத் தொந்தரவுகளைச் சகிக்க முடியவில்லை. ஆகவே, வைத்தியப் பரிசோதனைக் கனுப்பி, 'இது ஒரு பைத்தியம்' என்று எழுதிக்கொடுத்து, ரஷ்ய அதிகாரிகளிடம் ஒப்பித்து விட்டார்கள். ரஷ்யாவிலும் அவர் காவலரை முட்டாள்களாக்கியே வந்தார். இறுதியாக, அவரைக் குரா நதிக் கரையிலுள்ள கிரிமினல் பைத்தியக்காரர் சிறையில் அடைத்து விட்டார்கள். சிறையின் மதில்கள் அவரைச் சிறைக்குள் மூன்று மாதங்களுக்கு அதிகமாக அடக்கி வைக்கக்கூடிய சக்தியைப் பெறவில்லை. அவர் சுவரேறி நதியில் குதித்துத் தப்பியோடிவிட்டார். பைத்தியம் போலியாக இருந்தபோதிலும், நடிப்பின் திறமை அதை மெய்யான பைத்தியமாக்கியது. இந்நடிப்பை அவர் நான்கு ஆண்டுகள் திறம்பட நடத்தினர்.

நான்கு வருஷமாகப் போலிப் பைத்திய நடிப்பில் அவர் அநுபவித்த இன்னல்களைக் கொஞ்சங்கூடப் பொருட்படுத்தாமல், மறுபடியும் தம்முடைய பழந் தொழிலில் ஈடுபட்டு, போல்ஷெவிக்குகளுக்கு வேண்டிய போர்க் கருவிகளைக் கள்ளத்தனமாய்ச் சேகரிப்பதில்

முற்பட்டார். சர்க்காருக்கு எதிராகச் சட்ட விரோத மான பல காரியங்களில் தலையிட்டு, துருக்கி, பல்கேரியா, கிரீஸ் ஆகிய இடங்களிலும், கப்பல் பிரயாணத்தின் போதும் அவர் பலமுறை கைதியானர். காவலிலிருந்த காலங்களிலெல்லாம் மிகச் சுலபமாகத் தப்பியோடி வெளி யில் வந்துவிடுவது அவரது வழக்கம். தம் அன்புக்குரிய தோழர் கோட் என்பவருடன் சேர்ந்து, ரஷ்யாவில் ஒரு கொள்ளையை நடத்தியதில் அவர் மீண்டும் கைது செய்யப் பட்டார். இதுவே அவர் இறுதியாகக் கைதியானது.

விசாரணையில் பற்பல குற்றங்கள் சுமத்தப்பட்டு நான்கு மரண தண்டனைகளைப் பெற்றார்! ஆனல் தோழர். காமோ ஒரு மரண தண்டனையைக்கூட ஏற்கத் தயாராயில்லை. ரோமனேவ் ராஜ பரம்பரையின் முந்நூருவது வருட ஆட்சி விழாக் கொண்டாட்டத்தின்போது ஜார் அரசர், சகல கைதிகளின் மரண தண்டனைகளையும் ஆயுள் தண்டனைகளாக மாற்றினர். எனவே, தோழர் காமோ ஒரு மரண தண்டனையைக்கூட ஏற்க மறுத்தது அவ்வண்ணமே நிறைவேறிற்று. ஜாரின் சிறைக்கூடத்தில் காமோ ஐந்து வருஷங்களைக் கழித்தார். இறுதியில் காமோவின் சிறைக் கோட்டக் கதவுகளைப் போல்ஷெவிக் புரட்சி திறந்து விட்டது. 'கிரிமினல் கைதி'யான காமோ, போல்ஷெ விக்குகளிடம் அன்புகொண்ட பல்லாயிர மக்களின் 'கண்யம் மிகுந்த வீரராக' வரவேற்கப்பட்டார்.

உண்மையாக ஒரு தத்துவத்தில் ஈடுபட்டோர் நாள டைவில் அதனுடனே ஒன்ருக ஐக்கியமாகி விடுகின்றனர். அதைப்போலவே கம்யூனிஸத்தைப் பின்பற்றுபவர்களும், நாளடைவில் தம் குறைகளெல்லாம் மறைந்து, அந்தக்

கொள்கையுடன் கலந்துவிடுகின்றனர். இதற்குத் தோழர் காமோ சிறந்த எடுத்துக்காட்டாவார். இவரை லெனின் மிக்க அன்புடன் 'காகேஸியக் கொள்ளைக்காரர்' என்று செல்லப் பெயரிட்டு அழைத்தார். வெறும் கொள்ளைக் காரர் உயர்ந்த ஒரு கொள்கைக்காக உயிரையும் விடத் தயாரானது ஆச்சரியமல்லவா ?

ஸ்டாலின் முழுப் புரட்சிக்காரர் ஆனபின் அவருடைய நடவடிக்கைகளைப்பற்றித் தெளிவாகத் தெரிய வில்லை. என்றாலும், அவர் டிப்லிஸை விட்ட பின்னர், பாகூவிலும், பாட்டூமிலும் உள்ள எண்ணெய் உற்பத்தித் தொழிலாளரிடையே ஒற்றுமையை வளர்க்கப் பாடுபட்டு வந்தார் எனத் தெரிகிறது. அவர் ராத்ஸ்சைல்ட், மன்டஷெவ் தொழிற்சாலைகளின் வேலை நிறுத்தங்களைப் பன்முறை நடத்திவைத்தார். அநேகந் தடவை அவர் கைது செய்யப்பட்டும், ஸைபீரியாவுக்கு நாடு கடத்தப்பட்டும் இருக்கிறார். எனினும், ஒவ்வொரு முறையும் தப்பியோடி வந்து, தம் பழைய வேலையிலேயே ஈடுபட்டு விடுவது அவர் வழக்கம்.

ருஷ்ய -ஜப்பானிய யுத்தத்திற்குப் பின் நடைபெற்றுப் பலன் தராது போன புரட்சியில், ஸ்டாலின் முக்கியமாகப் பாகூ பகுதியில் வேலை செய்துவந்தார். பாகூவில் தாம் பெற்ற அநுபவங்களைப்பற்றி, "எண்ணெய்த் தொழிலாளரிடை இரண்டு வருஷ காலமாக நான் நடத்திவந்த புரட்சிப் பணி, என்னை அநுபவரீதியான போராட்டக்காரனாக்கிவிட்டது...... பாட்டாளிப் பெரு மக்களின் மெய்யான தலைமைப் பதவி எனச் சொல்லப்படுவது இன்னதுதான் என்பதை முதன்முதலாக அறிந்தேன்.

புரட்சி அக்கினியில் எனது இரண்டாவது ஞான ஸ்நானத்தைப் பெற்றேன். பிறகு நான் ஒரு புரட்சி யாத்திரிகனுக ஆனேன்" என்று பின்னுல் ஒரு சொற் பொழிவில் கூறியிருக்கிருர்.

ஸ்டாலின் ஒரே இடத்தில் நிலைத்திராமல் ஊரூராகப் பிரயாணம் செய்து, பிரசாரம் புரிந்து, மக்களின் சக்திகளை ஒன்று திரட்டி வந்தார். முதல் முறையாக ஸ்டாலின் லெனினைச் சந்தித்தபொழுதே அவருடைய தகுதியைத் தலைவர் லெனின் தெரிந்துகொண்டு விட்டார். வானளாவப் பேசும் பல கம்யூனிஸ்டுகளைப் போலல்லாமல், ஸ்டாலின் அடக்க ஒடுக்கமான காரியவாதி என்று லெனின் முடிவு செய்துகொண்டார்.

பற்பல இடங்களில் நடைபெற்ற கம்யூனிஸ்ட் கட்சியின் அதி முக்கிய ஆலோசனைக் கூட்டங்களுக்கு அவர் அழைக்கப்படுவார். இதனுல் ஐரோப்பாவிலுள்ள பல தேசங்களைக் காணும் சந்தர்ப்பங்கள் ஸ்டாலினுக்கு ஏற்பட்டன. அவர் கைதியான ஐந்து தடவைகளில், இறுதியாக 1913-ல் பெரிய பந்தோபஸ்துடன் ஸைபீரியாவுக்கு நாடு கடத்தப்பட்டார். அங்கே நான்கு ஆண்டுகளைக் கழித்தபின் போல்ஷெவிக் புரட்சி அவரை விடுவித்தது.

# III

## அக்கினிப் பரீட்சை

'திட்டமான வெற்றியைப் பெற நமக்கு வேண்டியவை என்ன? நமக்கு வேண்டியவை மூன்று பொருள்கள்: முதலாவது - யுத்தக் கருவிகள், இரண்டாவது-யுத்தக் கருவிகள், மூன்றாவது - யுத்தக் கருவிகள்; மேலும் மேலும் தேவையானவை யுத்தக் கருவிகளே.'

— ஸ்டாலின்.

ஓரிரண்டு வருஷங்களல்ல, மூன்று வருஷங்களாக ஜெர்மன்-ரஷ்ய யுத்தம் - கொலை பாதகயுத்தம் - நடந்தது. ஏற்கனவே நடுக்கங் கண்டிருந்த ரஷ்ய ஆட்சியின் அஸ்திவாரம் இந்த முதல் உலக யுத்தத்தால் தள்ளாடத் தொடங்கிற்று. யுத்த அரக்கன் ரஷ்ய மக்களில் 25 லட்சம் உயிர்களை விழுங்கி ஏப்பமிட்டான்; 30 லட்சம் பேரைப் படுகாயப்படுத்தி, 10 லட்சத்திற்கு அதிகமானவருக்கு வறுமை நோயையும், பீதிப் பிணியையும் புகுத்தி நாட்டை விட்டு ஓடச்செய்தான். காளைப்பருவமும் திடகாத்திரமும் பெற்ற அநேகர் யுத்த சேவையில் ஈடுபட்டதால், விவசாயத்திற்கு ஆள் பஞ்சம் ஏற்படவே, நிலங்கள் தரிசாய்க் கிடந்தன. பட்டினியும் பஞ்சமும் தாங்கமுடியாத அளவுக்கு வந்துவிட்டன.

ஜாரின் அதிகாரிகள் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் பொது ஜனக் கொதிப்பை வளர்த்தன. ரஷ்யத் தலைமை அதிகார பீடமான கிரேம்லின் மாளிகையில் ஜெர்மானியரிடம் அநுதாபங் கொண்ட செல்லப் பிள்ளைகளின் அட்டூழியங்களைப் பொறுக்கக் கூடவில்லை.

கேளிக்கைகளில் மூழ்கியிருந்த கபட சன்னியாசியான ரஸ்புட்டீன் அரண்மனையின் அந்தப்புரத்திலும், பிரபுக்கள் குடும்பங்களிலும் நடத்திவந்த லீலா விநோதங்களைப் பற்றி எங்கும் ஒரே பேச்சாக இருந்தது. ஏழை விவசாயிகள் யுத்த முனைகளில் இருக்கும்பொழுது உத்தியோகஸ்தரிடையே லஞ்சப் பேய் தாண்டவமாடிற்று. பட்டினியாலும், பஞ்சத்தாலும் மக்கள் வாடி வதங்கிக் கொண்டிருக்கையில், சர்க்கார் தன் ஆடம்பர அதிகார படாடோபங்களை என்றும்போல் அன்றும் நடத்தி வந்தது. கொதித்துக் கொந்தளித்துக் கொண்டிருந்த இந்த நிலைமைகளை மனத்திற்கொண்டே, "யுத்தத்தால் பிறந்த பொறுக்க முடியாத வறுமைப் பிணியில் துன்பப்பட்டும், கேட்பாரற்றும் கிடந்த ரஷ்ய மக்களால் புரட்சித் தீ வளர்க்கப்பட்டது" என்று லெனின் கூறினார்.

புரட்சியின் முதலாவது உதையைப் பீட்ரோகிராட் (இப்பொழுது லெனின்கிராட்) நகரத்துப் பாட்டாளிகள் தான் கொடுத்தனர். அவர்கள் சர்க்காரைத் தூக்கி எறிந்துவிட்டுப் பாட்டாளிகளின் ராணுவக் கவுன்ஸிலை நியமித்தார்கள். உடனே ஸ்டாலினும் ஸைபீரியா தேசப்பிரஷ்டத்திலிருந்து விரைந்து வந்து புரட்சியில் கலந்துகொண்டார். அவர் பீட்ரோகிராட் ஸோவியத் நிர்வாகக் கமிட்டிக்கு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்று, கம்யூனிஸ்ட் பத்திரிகையான 'பிரவ்டா' வின் நிர்வாகப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டார்.

ஸ்விட்ஜர்லாந்திலிருந்து 1917, ஏப்ரலில் லெனின் வந்து சேர்ந்ததும், மேல் நடக்கவேண்டிய காரியங்கள் விரைவாய் ஆரம்பமாயின. இந்த அவசரத்தில் ஜார்

குடும்பம் மெல்ல நழுவ இருந்ததைக் கண்டுபிடித்து, அந்த மாட்சிமை தங்கிய குடும்பத்தாரின் ஆத்மாக்களுக்கு இறுதியான சாந்தமும், சமாதானமும் சித்திக்கும்படி கடைத்தேற்றிய பின்னர், ஒரு முதலாளித்துவ சர்க்கார் அமைக்கப்பட்டது.

தம் கட்சியை இச் சந்தர்ப்பத்திற் கேற்றபடி அமைக்கவும், தாற்காலிக முதலாளித்துவ சர்க்காரை ஒரே அடியில் வீழ்த்தவும் லெனின் கொஞ்ச காலம் காத்திருக்க வேண்டியிருந்தது. ஆகவே, கெரன்ஸ்கியின் முதலாளித் துவ சர்க்காரை ஆதரிப்பதைத் தவிர வேறு வழி இல் லாது போகவே, அதற்கு லெனின் ஆதரவு தந்தார். லெனின் விளையாடிய இக் கண்ணும்பூச்சி விளையாட்டைக் கெரன்ஸ்கி ஓரளவு அறிந்திருந்தும், அதிகார மோக மேலீட்டால் இந்த ஏற்பாட்டை ஏற்றுக்கொண்டு, கம்யூ னிஸ்டுகளுக்கும் சர்க்காரில் இடம் கொடுத்தார். அவரும் தமக்கேற்ற சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந் தார். திடீரென்று கம்யூனிஸ்டுகளான டிராட்ஸ்கி, காமெ னெவ், லெனின் ஆகிய மூவரையும் கைது செய்யுமாறு உத்தரவிட்டார். லெனினைத் தவிர மற்றிருவரும் அகப் பட்டுக்கொண்டனர். கெரன்ஸ்கியை ஆதரித்தல் இதோடு முற்றுப் பெறவேண்டுமென உறுதிகொண்ட லெனின், கெரன்ஸ்கி சர்க்காரைத் தூக்கியெறிய இதுவே சமயம் என்ற முடிவுக்கு வந்தார்.

ஆகவே, சர்க்காரை நடத்துவதற்குள்ள பெரும் பொறுப்பையும், சுமையையும் கெரன்ஸ்கியின் தோள்களி லிருந்து இறுதியாக இறக்கிவிடக் கருதிய லெனின், அக் டோபர், 23-ஆம்தேதியன்று திடீரெனப் பீட்ரோகிராடுக்கு

வந்துசேர்ந்ததும், "சரியான நேரத்தில், சரியான இடத்தில் உங்களுடைய முழுச்சக்திகளையும் பிரயோகித்து, நீங்கள் ஜயசிலர்களாய் வெளி வரவேண்டும்!" என்று முழக்கம் செய்தார். லெனின் கூறியவாறே நேரமும், இடமும் மிகப் பொருத்தமாக இருந்தன. முதலாவது அடி கெரன்ஸ்கி ஆட்சியின் உச்சந்தலையைப் போன்ற பீட்ரோகிராடிலும், மறு உதை மாஸ்கோவிலும் விழவே, பீட்ரோகிராடையும் மாஸ்கோவையும் செவ்வீரர்* கைப்பற்றினர். கெரன்ஸ்கி சர்க்காரோ நாட்டை விட்டே ஓடிவிட்டது.

யுத்த விளைவுகளால் நாடு அலங்கோலப்பட்டிருப்பதை ஒழுங்குபடுத்தும் பொருட்டு, லெனின், ஸ்டாலின், டிராட்ஸ்கி, ஸிநோவியெவ், காமெநெவ், ஸொகோலிங்கொவ், பப்நொவ் ஆகிய எழுவர் அடங்கிய இராணுவப் புரட்சிக் கமிட்டி ஒன்று நியமிக்கப் பட்டது. அதிக முக்கியமான விஷயங்களை உடனே முடிவு கட்டுவதற்கு இராணுவப் புரட்சிக் கமிட்டிக்குள் ஒரு நிர்வாகக் கமிட்டியை நிறுவியதும், அதில் ஸ்டாலின் அங்கத்தினரானார். இதன் பிறகு, ஸ்டாலின், 'தேசீய இனங்களின் மந்திரி'யாகவும் (Commissar of Nationalities), விவசாயம், தொழிற்சாலைகளின் 'இன்ஸ்பெக்டர் ஜெனரலா'கவும் நியமனம் பெற்றார்.

ஒருபுறத்தில் ஜெர்மன் சேனை எஸ்தோனியாவிலிருந்து கருங்கடல் வரை ஆக்கிரமித்துக்கொண்டு கிழக்கு நோக்கி முன்னேறுகிறது. மற்றொரு புறத்தில் ஜப்பானியக்

*செவ்வீரர்-போல்ஷெவிக் கட்சியின் செங்கொடியை ஏந்திச் சிவப்புநிற ஆடையுடன் விளங்கும் போர் வீரர்.

குள்ளர்கள் விலாடிவாஸ்டாக் துறைமுகத்தைக் கைப் பற்றுவதாகப் பயமுறுத்துகிறார்கள். பின்லாந்தில் போல் ஷெவிக்கருக்கு விரோதமான சர்க்கார் ஏற்படுத்தப்பட் டிருக்கிறது. ரஷ்யர் விடுதலை செய்த ஸெக் நாட்டுச் சிப் பாய்கள், தம் நாடு நோக்கித் திரும்பும் வழியில், எதிர்ப் புரட்சிக்காரரோடு சேர்ந்து கிழக்கே பாயத் தயாராகின்ற னர். அயல் நாட்டு முதலாளிகளால் போஷித்து ஏவப்படும் எதிர்ப் புரட்சிச் சேனை நாற்புறமும் சுற்றி வளைக்கப் பார்க் கிறது. டெனிகின் என்ற தளபதி தெற்கிலிருந்தும், கோல்சாக் கிழக்கிலிருந்தும், யுடெனிக் வடக்கிலிருந்தும் பீட்ரோகிராடையும் மிரட்டுகின்றனர். இந்தச் சம்பவங்கள் ரஷ்யாவை முக்கியமான வேளையில் கண்கலங்க வைத்தன.

ஒரே அடியில் வீழ்ச்சியுற்ற கெரன்ஸ்கி, தம் வீழ்ச் சிக்கு ஐந்து நாட்களுக்குப் பிறகு வெளியே வந்து, "போல்ஷெவிஸம் நொறுங்க ஆரம்பித்துவிட்டது, அது தனித்துப் போய்விட்டது; அது போலி வலுப் பெற் றிருப்பதால் நெடுங்காலம் நிலைத்து நிற்கமுடியாது!" என்று உறுமினர். இதைக் கேள்வியுற்ற தொடை நடுங்கி டிராட்ஸ்கியவாதிகளான ஸிநோவியெவ்வும், காமெநெவ் வும், இவர்களைப் போன்ற வேறு சில கம்யூனிஸ்ட் தலைவர்க ளும் தைரியமிழந்து, எதிரிகளை எதிர்ப்பதை விடுத்து, அவர் களோடு சமாதானம் செய்துகொள்ளும்படி தூண்டினர். இவ்வாறு லெனின் தம் ஆட்களாலேயே ஏமாற்றப் பட்டார் என்றாலும், அஞ்சாமல், "நான் தினையை விதைத் தேன்; வினை முளைத்திருக்கிறது" என்று கூறினர். சந்தர்ப் பம் எதிரே வந்து நிற்கும் அவ் வேளையில் அதைத் தமக்கு அநுகூலப்படுத்திக்கொள்ளும் ஆற்றல் பொருந்திய காரிய

வாதிகள் தேவைப்பட்டனர். ஆனால், லெனின் தலைமையை ஏற்கும் நூற்றுக் கணக்கான கம்யூனிஸ்ட் தலைவர்கள் வெறும் வாய்வீச்சுக்காரராகவே இருந்தனர். பாட்டாளி களின் புரட்சியை ஜயம்பெற நடத்திச் செல்லும் சக்தி படைத்த உண்மையாளர் மிகச் சிலராகத்தான் இருப்பர் என்று லெனின் தெரிந்துகொண்டார். ஒரு கை அளவின ராயிருந்த இவர்களிலும் ஸ்டாலினையே முதன்மையானவ ராக அவர் கருதினார்.

கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டங்களில் ஸ்டாலின் தம்மை விளம்பரப்படுத்திக் கொள்ளாமல் கடைக்கோடி மூலையில் ஒதுங்கி உட்கார்ந்திருப்பார். அக் கூட்டங்களில் நடை பெறும் அர்த்தமற்ற வாதப் பிரதிவாதங்களையும், வாய்வீச்சு வேதாந்தங்களையும் அவர் காதில் போட்டுக்கொள்வதும் இல்லை; அவற்றை மறுப்பதும் இல்லை. மேலும் அவ ருடைய நடையுடை பாவனைகள் யாவும் ஒரு பட்டிக்காட் டானுடையவைபோல் இருந்தன. இவ் 'விசித்திர ஜார்ஜிய'ரிடம் ஒரு தலைவனுக்குரிய சகல குணங்களும் பொருந்தியிருப்பதை லெனின் நுட்பமாய் அறிந்து, டிராட்ஸ்கியின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல், மிகக் கடினமான பொறுப்புள்ள சகல வேலைகளையும் ஸ்டாலினி- டம் ஒப்படைத்தார். இவ்வாறு லெனினும் ஸ்டாலினும் ஒருவரையொருவர் பெரியோரென எண்ணிக்கொண்டிருக் கையில் லெனினுடைய 'ஆமாஞ்சாமி'களில் ஸ்டாலினும் ஒருவர் என்று டிராட்ஸ்கி தீர்மானித்துக்கொண்டார்.

ஸ்டாலின், ஆரம்ப நாட்களில் நடத்திய புரட்சி களின் படிப்பினைகளைத் துணைக்கொண்டு, அவசியப்பட்ட இடங்களிலெல்லாம் ஊழியம் செய்துவந்தார். ஒரு

சந்தர்ப்பத்தில் அவர் கூறியதாவது: "எனது சிறை வாசத்திற்கும் தேசப்பிரஷ்டத்திற்கும் பிறகு, 1917-ல் கட்சி தீர்மானித்தபடி, நான் லெனின்கிராடுக்கு வந்தது ஞாபகம் இருக்கிறது. உழைப்பாளர் கட்சியின் தலைவரில் ஒருவனுதல் என்றால் என்ன என்பதை, அதி பயங்கர உலக யுத்தத்தின் சண்டமாருதச் சுழலின்போது, அகில உலகப் பாட்டாளிகளின் மாபெரும் தலைவர் தோழர் லெனினின் நெருங்கிய தொடர்பால், ரஷ்ய உழைப்பாளிகளிடமிருந்து முதல்முதலாகக் கற்றுத் தெரிந்துகொண்டேன். எல்லா நாடுகளிலும் இருக்கிற சகல தேசீய வர்க்க இனங்களிலும் தாழ்த்தப்பட்டு நசுங்கும் இனத்தார்களைக் கைதூக்கி விடுவோருக்கும் தொழிலாளரின் வர்க்கத்திற்காகப் போர் புரிவோருக்குமாக ரஷ்ய உழைப்பாளர் மத்தியிலே தோன்றிய புரட்சிப் போரில் அக்கினிமயமான எனது மூன்றாவது ஞானஸ்நானத்தைப் பெற்றேன். ரஷ்யாவில், லெனின் காட்டிய வழிப்படி, நான் புரட்சியில் தேர்ச்சிபெற்ற ஓர் ஊழியனானேன்."

ஜெர்மன் ஏகாதிபத்திய யுத்தத்திலிருந்து ரஷ்யாவை விடுவிக்கக்கூடிய உடனடியான பிரச்னைகளைப்பற்றி முடிவு காணவேண்டியது மிக்க அவசியமாய் இருக்கவே, பிரெஸ்ட் லிடவ்ஸ்க் என்ற இடத்தில் செய்யப்பெற்ற சமாதான ஒப்பந்தம் 1918-மார்ச், 3-ஆம் தேதி கையெழுத்தாயிற்று. இதன் பிறகே உள்நாட்டிலுள்ள விரோதிகளைக் கவனிப்பதில் போல்ஷெவிக்கர் முனைந்தனர்.

உணவுப்பொருள் வினியோக மந்திரி என்ற ஹோதாவில் ஸ்டாலின், போல்ஷெவிக் யுத்த வீரரின் ஆகார வினியோகத் திட்டங்களை வகுத்து நடத்திவைக்கவேண்டிய

பொறுப்பை மிக அவசரமாகக் கவனிக்க வேண்டியிருந்த தால்,தெற்குநோக்கி ஸாரிட்ஸின் (இப்பொழுது ஸ்டாலின் கிராட்) நகருக்குப் புறப்பட்டார். ஆனால், ஸாரிட்ஸினில் கோஸக்குகளின் படையெடுப்பு மிரட்டுதலை எதிர்க்க மும்முரமான ஏற்பாடுகளைச் செய்யவேண்டி யிருந்தது. ஒற்றர்களும், ஐந்தாம் படையினரும் பீதிகளைக் கிளப்பி வந்தனர். மறுபுறத்தில் பொதுஜனங்களோ குழம்பிப் போய்த் தோல்வி மனப்பான்மைகொண்டு, சரணடைந்து விடுவதே சரியான வழி என்று பேசிக்கொண்டனர்; இவ் வேளையில்தான் வந்துசேர்ந்தார் ஸ்டாலின். உடனே, ஒரு கமிட்டியை நிறுவி, காட்டிக்கொடுக்கும் துரோகி களைக் கட்சியிலிருந்து கல்லி எறிந்தார். சகலவித ஆக்கிர மிப்புக்களையும் எதிர்த்து நிற்கும் சக்தியைப் பொது மக்க ளுக்குப் புகட்டினார். மோட்டார் மெக்கானிக்காயிருந்த வோரோஷிலோவ் (இன்று பாதுகாப்பு மந்திரியாயும், சேனாதிபதியாயும் இருப்பவர்) என்ற சாமர்த்தியம் மிக்க தலைவரை ஸாரிட்ஸின் நகரப் பாதுகாப்புக்கு நியமித்தார். இறுதியாக, யுத்தமும் மூண்டது. ஸாரிட்ஸின் வீரர் கரும் பாறைபோல் கலங்காது நின்று, கோஸக்குகளை விரட்டி அடித்து ஜயபேரிகை கொட்டினர்.

ஸ்டாலின், பராக்கிரமம் பொருந்திய மகத்தான வெற்றியைப் பெற்றபின், பேர்ம் என்ற ஊருக்கு அனுப்பப் பட்டார். அங்கே மூன்று மாத காலமாக நடக்கும் யுத்தத்தில் போல்ஷெவிக்கர் 250 மைல் பின்வாங்கியும், 18,000 உயிர்களை இழந்துமிருந்தனர். உடனே ஸ்டாலின் தோல்வி மனப்பான்மைகொண்ட சேனா வீரர்களை நீக்கி, தகுதியுள்ளவரை நியமித்து, அஞ்சா நெஞ்சம் படைத்த

வீர ராணுவத்தை ஏற்படுத்தினர். 1919 - ஜனவரியில், பெர்முக்கு அவர் வந்தார்; பிப்ரவரியில் எதிரிகளை நொறுக்கித்தள்ளி, உரல்ஸ்க் பகுதிக்கு விரட்டி அடித்தார்.

அவ்வருஷ வசந்தத்தில் பீட்ரோகிராடைத் தாக்கிக் கொண்டிருந்த பகைத் தளபதி யுடெனிக்கை எதிர்த்துத் தாக்கும் பொருட்டு ஸ்டாலின் வரவழைக்கப்பட்டார். பீட்ரோகிராட் தலைநகரைக் காப்பதற்காகக் கடற்படையைக் கொண்டு கோர்க்காவை உடனே தாக்கிக் கைப்பற்ற வேண்டும் என்று ஸ்டாலின் வகுத்த திட்டத்தை, போரில் மிகுந்த அநுபவமுடையோர் கடுமையாய் எதிர்த்தார்கள். ஆனல், ஸ்டாலின் தம் திட்டப்படியே தாக்கி, கோர்க்காவைக் கைப்பற்றிவிட்டு, நிலைமையைக் கீழ்க்கண்டவாறு தந்திமூலம் லெனினுக்கு அறிவித்தார். அதாவது: "கடல் மார்க்கமாகக் கோர்க்காவைப் பிடித்து விடலாம் என்று நினைப்பது, கடற்போர் முறைக்கு முரணனது என்று கடற்போர் நிபுணர் வற்புறுத்துகின்றனர். ராணுவ தந்திர சாஸ்திரம் என்கிறுர்களே, அந்தச் சாஸ்திரத்தின்பேரில் நான் பரிதாபங் கொள்கிறேன். கடலிலும், தரையிலும் என் இஷ்டப்படி எதிர்க் கட்டளைகளைப் பிறப்பிக்கும் அளவுக்கு நான் தலையிட்டு, கோர்க்காவை மின்னற் பொழுதில் கைப்பற்றியாகி விட்டது. வருங்காலத்திலும் இவ்விதமே நடந்து கொள்வேன் என்று அறிவித்துவிட வேண்டியது என் கடமை என நினைக்கிறேன்."

இவ்வாறு ஸ்டாலின் தம் திட்டப்படி பணியாற்றத் தொடங்கினர். பின்னர் ஜெனரல் டெனிகின் வசமிருந்த ராஸ்டாவ் நகரை மீட்கும்படி பீட்ரோகிராடிலிருந்து ஸ்டாலின் அனுப்பப்பட்டார். ராஸ்டாவைத் தாக்கு

வதற்குத் தம்மிடம் சொந்தத் திட்டங்கள் இருப்பதாகவும், "அவற்றைக் கைவிட்டு விட்டுத் தெற்கு முனையில் பிரயோஜனமற்ற, பாதகமான, மிதமிஞ்சிய அநீதிகளைச் செய்துகொண்டு இருப்பதைவிட, எங்காயினும் - பிசாசிடமாயினும் சரி - போய்விடுதல் உரிமையும் கடமையுமாகும் என்று கருதுவேனே அல்லாமல், தெற்குப் போர்முனையில் இருக்க விரும்பமாட்டேன்!" என்று அவர் உடனே லெனினுக்குத் தெரியப்படுத்தினர்.

தலைநகரத்திலிருந்து அனுப்பிய டிராட்ஸ்கியின் உத்தரவுகளைத் தட்டிக் கழித்து, தம் போக்குப்படியே ஸ்டாலின் நடந்துகொண்டது, டிராட்ஸ்கிக்கு மனத் தாங்கலை உண்டுபண்ணின போதிலும், ஸ்டாலின் அடைந்த வெற்றிகள் அவர் வாயை அடைத்தன. ஸ்டாலின், தம் சேனையின் முழுச் சக்தியையும் ஒருங்கே திரட்டி, திட்டமாகவும் துரிதமாகவும் ஒரு குறுகிய முனையில் எதிரிக்குக் கொடுத்த உதை அவனை நிலை கலக்கிச் சின்ன பின்னப்படுத்தி விட்டது. எதிர்த் தாக்குதலின் அதிர்ச்சியைத் தாங்க முடியாத டெனிகினின் கோஸக் படைகள், கருங்கடல் கரைகளுக்கு ஓட்டம் எடுத்தன.

ரஷ்யாவிலிருந்த சகலவிதக் களைகளையும் அப்புறப் படுத்திப் பகைவரையெல்லாம் ஒடுக்கி விரட்டிய பின்னரே அத்தேசம் லெனினுடைய தலைமையில் தோற்றுவிக்கப் பட்ட தன்னுடைய ஸோஷலிஸ்ட் திட்டத்தைப் பரிசோதிக்கத் தொடங்கிற்று. ஜாரின் கொடுங்கோல், முதலாவது உலக யுத்தத்தின் பயங்கரத் தோல்விகள், புரட்சி, முதலாளித்துவம் இவற்றின் சின்னங்கள் மறையாமல், கெரன்ஸ்கி முதலியோர் மூலம் முளைவிட்டுக் கொண்

டிருந்தன. வெளி அரசாங்கங்களின் தலையீடு, அவைக ளால் தூண்டப்பெற்ற தளகர்த்தர்களும் பட்டாளங்களும் தொடுத்த உள்நாட்டுப் போர் - இத்தனை விஷயங்களும் ஓய்ந்த பின்புதானே ஒரு புதுப் பரீட்சையைச் செய்து பார்க்க முடியும்?

# IV

## ஆதிக்கிய மோகம்

'பிடிவாதமான மார்க்ஸிஸமும், வளர்ச்சியுறும் மார்க் ஸிஸமும் இருக்கின்றன: நான் பின்னுள்ளதைத் தழுவி நிற்கிறேன்.'

— ஸ்டாலின்

என்ன செய்வார் ஸ்டாலின்! நான்கு வருஷக் கடுமையான உழைப்பு; அதுவும் ஒரே இடத்தில் சாசு வதமாக இல்லை. யுத்த களத்துக்கு யுத்த களம் ஓட வேண்டும்; சிதைந்து கிடக்கும் போல்ஷெவிக்குகளைத் திரட்டி வீரப் போர் நடத்தவேண்டும். மேலும், காலா காலங்களில் ஆகாரம் கிடைப்பதுண்டா? ஓய்வு, உறக்கந் தான் உண்டா? இல்லை, இல்லை! புசிக்க முரட்டு ரொட்டி யும், குடிக்கச் சிறிது ஜலமுந்தான் கிடைக்கும். வெங்காய மும், வெள்ளைப்பூண்டும் சிலவேளைகளில் கிடைத்து விட்டால், அவற்றையும் ரொட்டியையும் சேர்த்து, விருந் துண்பதாகக் கருதிக்கொண்டு ஸ்டாலின் பரம திருப்தி யுடன் புசிப்பார். வாசஸ்தலமோ ஈரமும் அசுத்தமும் நிறைந்த அரண்கள் தாம். இந்த அசௌகரியங்கள் யாவும் ஒன்று சேர்ந்திருந்தன. ஆயினும் யுத்தங்கள் சாதகமாய் முடிந்தன. பிறகு, கடுமையான பிணி மேற்கொள்ளவே,

ஸ்டாலின் படுத்த படுக்கையாய்க் கிடக்க வேண்டிய நிர்ப் பந்தம் ஏற்பட்டது.

நோய் முற்றிய நிலையில், ஜீவ - மரணப் போராகத் தோன்றியது. ஸ்டாலினை இழந்துவிட லெனின் ஒருப்பட வில்லை. ஆகையால், அவருடைய படுக்கையின் பக்கத்தி லேயே காத்துக் கிடந்தார். ரஷ்யாவிலுள்ள தேர்ந்த டாக்டர்களை வரவழைத்துப் பரிசோதித்தார். வயிற்றுக் கோளாறுக்காக இராணுவ ஆஸ்பத்திரியில் சேர்த்து ரண சிகிச்சை செய்துவைத்தார். ஸ்டாலின் கொஞ்சங் கொஞ்ச மாய்க் குணமடைந்து வருவதை அறிந்த லெனின், சந்தோஷ மிகுதியால் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். ஓய்வு பெறவும், ஜன்ம தேசமான ஜார்ஜியாவில் சிறிது காலம் மலைக்காற்றை அநுபவிக்கவும் ஸ்டாலின் அங்கே சென்றார்.

தேச ஊழியத்திலிருந்து சிறிது விலகியிருக்கும் போதுங்கூட, லெனினுடைய அரசாங்க சபைக்கு, டிராட்ஸ்கி காமெனெவ் ஆகியவர்களுடன், ஸ்டாலினும் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தார். அவர், ஓய்வெடுத்துக் கொண்டு உடம்பு தேறித் திரும்பியதும், கம்யூனிஸ்ட் கட்சியின் காரியதரிசியாக ஏக மனதாகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். அவருடைய மனப்பூர்வமான சலியா உழைப்பின் பயனாக, ஸோவியத் யூனியனிலுள்ள அநேக இரகசிய உத்தியோகங்களுக்கும் உயர்த்தப்பட்டார்.

ஸ்டாலின், மேல் பதவிகளுக்கு இவ்வாறு விறு விறென்று உயர்த்தப்படுவதைக் கண்ட டிராட்ஸ்கி, காம நெவ், ஸிநோவியெவ் ஆகியோர் ஒரு பக்கம் பொறாமை அடைந்துகொண்டும், மறுபக்கம் தம்முள் ஒருவரை ஒரு

வர் சந்தேகித்துக்கொண்டும் இருந்தனர். லெனினுக்குப் பின்னால் வரப்போகும் தலைமைப் பதவியைப் பெறுவதில் ஸ்டாலின், தங்களுக்கு ஒரு பிரமாதமான எதிரியாக இருக்கமாட்டார் என்று எண்ணிய இந்த மும்மூர்த்தி களில் ஒவ்வொருவரும், ஸ்டாலினைத் தமக்குச் சாதகமாக வும், மற்றவருக்குப் பாதகமாகவும் உபயோகித்துக்கொள் ளத் தகுந்த சொக்கட்டான் காய் என்று நினைத்திருந்தனர்.

1922 - ல் லெனின் பிணிவாய்ப்பட்டார். வலது கையையும் இடது காலையும் பக்கவாதம் உதவாமற் செய்து விட்டது. தங்கள் தலைவரின் முடிவுக்குரிய இறுதிப் பிணி அதுவே என்று யாவரும் நம்பினர். ஸ்டாலினே அவரைக் கவனிப்பதில் முனைந்திருந்தார். மும்மூர்த்திகளோ அதிகார வேட்டையாட ஆரம்பித்துத் தம்மில் ஒருவரை ஒருவர் வெளிப்படையாகக் குற்றஞ் சாட்டித் தாக்கிக் கொண்டு வந்தார்கள். இதற்கிடையில் லெனின் முற்றும் குணமடையவே, திரிமூர்த்திகளின் அடிவயிற்றில் இடி விழுந்தது போலிருந்தது. மனமுடைந்து ஜனங்கள் முன் வந்து முகங் காட்டவும் வெட்கப்பட்ட டிராட்ஸ்கி, தாம் மிகவும் நோயுற்றிருப்பதாக அறிவித்தால், பொது மக்க ளின் அநுதாபம் தமக்கு ஓரளவு கிடைக்கும் எனக் கருதி, அவ்வாறே அறிவித்தார். டாக்டர்கள் அவர் சுகமாகவே இருப்பதாகக் கூறவும், தாம் அசௌக்கியமாய் இருப்ப தாகவே அவர் பிடிவாதம் பிடித்துக் காகஸஸ் பக்கம் சென்று ஓய்வெடுத்துக்கொண்டார்.

ஆனால், சிறிது காலந்தான் லெனின் சுகமாயிருந்தார். முன்னர் வந்த அதே நோய் மறுமுறையாக இப்பொழுது தாக்கவே, அதிலிருந்து அவர் மீள இயலவில்லை. ஆகவே,

அவருடைய உடலிலிருந்து அதை இயக்கிவந்த சக்தி, வலுவிழந்து, 1924 ஜனவரி 21-ல் நின்றுவிட்டது. உலகி லுள்ள சகல பாட்டாளி மக்களும் தமது அன்புக்குரிய மாபெருந் தலைவரின் பிரிவுக்காகத் துக்கம் காத்தனர். டிராட்ஸ்கி, ஸினோவியெவ், காமெனெவ் இவர்கள் பாவனை யாகத் துக்கப்பட்டுவிட்டு, 'தூண்டில்காரனுக்கு மிதப்பில் கண்' என்றபடி நிறுத்தி வைத்திருந்த இடத்திலிருந்து அதிகார வேட்டையை ஆரம்பித்தார்கள். முன்போல் ஸ்டாலினை இம்முறை இலேசாகத் தட்டிக் கழித்துவிட முடியாது என்பதை அவர்கள் நன்கு அறிந்திருந்தார்கள்.

தலைவர் பதவிக்குப் போட்டியிட ஸ்டாலின் விரும்ப வில்லை; கட்சியின் காரியதரிசியாக மேலும் இருக்க அவர் ஆசைப்படவுமில்லை. ஆகையால், லெனின் மரணத்திற்குப் பின், அவர் காரியதரிசிப் பதவியின் ராஜிநாமாவைக் கம்யூனிஸ்ட் கட்சிக் காங்கிரஸில் சமர்ப்பித்தார். ஆனால், டிராட்ஸ்கி, ஸினோவியெவ், காமெனெவ் உள்ளிட்ட பல ரைக்கொண்ட கட்சி, ராஜிநாமாவை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டது. யாரோ ஒருவர் பாடுபடவும், அதனால் வரும் பலனை நோகாமல் அநுபவிக்கவும் ஆசையுள்ள பலர் அங்கே கூடியிருந்ததாலேயே ராஜிநாமா மறுக்கப்பட்டது. பதவி வேட்டையாடும் திரிமூர்த்திகளில் ஒவ்வொருவரும், ஸ்டாலினை மெதுவாக நகர்த்திவிட்டுப் பிறகு கூட இருந்த மற்ற இரு கூட்டாளிகளையும் ஒதுக்கிவைத்துத் தலைவர் பதவியை மிக எளிதாக அடைந்துவிட முடியும் என்று கருதித் தைரியம் கொண்டிருந்தார்கள்.

ஸினோவியெவ்வும், காமெனெவ்வும் ஒன்று சேர்ந்து கொண்டு தம்மை அப்புறப்படுத்த முயற்சித்து வருவதாக

டிராட்ஸ்கி குற்றஞ் சாட்டிவந்ததோடு, சர்க்காரில் தம் முடைய பிடிப்பைப் பலப்படுத்திக்கொள்ள நினைத்து, யுத்தக் கமிஸ்ஸார் (யுத்த மந்திரி) என்ற ஹோதாவில் ராணுவத்திலுள்ள சகல பதவிகளுக்கும் தமக்கு வேண்டிய ஆட்களையே நியமித்துவந்தார். தம் இலாகாக்களிலுள்ள உத்தியோகங்களுக்குத் தமக்கு ஏற்றவர்களை ஸிநோவியெவ்வும் காமநெவ்வும் புகுத்தி வந்தார்கள். தனி நபர்களின் சொந்த நலன்களுக்காகச் சர்க்கார் இவ்வாறு சுரண்டப்படுவதைக் கட்சி பார்த்துக்கொண்டு சும்மா இருக்க முடியுமா? ஆகவே, நாளடைவில் நடவடிக்கை எடுக்க ஏற்பாடாயிற்று. 1925 ஜனவரியில் மலோடோவ் தலைமையில் கூடிய கட்சி, டிராட்ஸ்கியைச் சர்க்காரிலிருந்து நீக்கிவிட்டு, ஸிநோவியெவ்வும் காமெநெவ்வும் பதவிகளை ராஜிநாமாச் செய்துவிடும்படி ஆக்ஞையிட்டது.

தலைமை நீக்கிவிட்டதுபற்றிப் புனராலோசனை செய்து கட்சி இரக்கங் காட்டவேண்டுமென்று டிராட்ஸ்கி கேட்டுக்கொள்ளவே, அயல் நாட்டு ஆலோசனை போர்டின் தலைவராகக் கட்சி அவரை நியமித்தது. எனினும், பதவிமோகம் இன்னும் அவரைவிட்டு நீங்கின் பாட்டைக் காணோம். 'சாட்சிக்காரன் காலில் விழுவதைவிடச் சண்டைக்காரன் காலிலே விழும்' தந்திரத்தை அவர் மேற்கொண்டார். ஸிநோவியெவ், காமெநெவ் ஆகிய ஜன்ம விரோதிகளை அணுகி, மனத்தாங்கல்களை விடுத்துத் தாம் மூவரும் ஒற்றுமைப்பட்டு எப்பாடு பட்டாவது ஸ்டாலினை அரசாங்கத் தலைமைப் பதவிக்கு வரவிடாமல் தடுத்துவிட வேண்டும் என்று அவர் தூண்டவே, அவ்விருவரும் இணங்கினர்.

ஆகவே, நாட்டில் பல் எதிர்ப்புகள் தலை தூக்கத் தொடங்கின. வெளி நாட்டு உள் நாட்டு யுத்தங்கள் ஒரு வாறு அடங்கிவிட்டபோதிலும், தன் காலின் வலிமையி லேயே நிற்கக்கூடிய சக்தியை ரஷ்யா இன்னும் பெற வில்லை. கம்யூனிஸ்டுகள் வகுத்த விவசாயத் திட்டம் நன்கு வேரூன்றிப் பலன்தரத் தொடங்கவில்லை. ஆதலால் இந்த ஸோஷலிஸ்ட் சோதனையில் ஜனங்கள் பூரண நம்பிக்கை கொள்ளவில்லை. ரஷ்யாவில் ஏற்பட்ட உழைப் பாளருடைய சர்க்காருடன் ஐரோப்பாவிலுள்ள முதலா ளித்துவ அரசாங்கங்கள் சர்வதேச நியதிப்படி உறவு கொள்ளாமல் பகைமையே கொண்டிருந்தன. மேலும், போல்ஷிவிக் சர்க்காரைக் கவிழ்க்கக் கருதும் சகல சக்தி களுக்கும் அவை தங்களால் இயன்ற அளவு உதவி செய்ய வும் முன்வந்தன.

ரஷ்யாவைச் சூழ்ந்து கவிந்து நின்ற அச்சக்திகளை ஒருவாறு உணர்ந்த டிராட்ஸ்கி, ஸிநோவியெவ், காமெ நெவ் ஆகியோர் ஒன்றுகூடி ஆலோசித்து, 'லெனின் கிராட் கட்சி' என்ற எதிர்க்கட்சியை அமைத்தார்கள். பழைய போல்ஷிவிக்கர்களான புகாரின், டாம்ஸ்கி, ரைகோப் என்ற மூவரும் ஒன்றுசேர்ந்து, வேறோர் எதிர்க்கட்சியையும் ஆரம்பித்தார்கள்.

டிராட்ஸ்கியின் 'லெனின்கிராட் கட்சி' அடியிற் காணும் குற்றச்சாட்டுகளைக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலையிற் சுமத்தியது: மார்க்ஸீயத் திட்டப்படி உலகப் புரட்சிக்கு ஊக்கங் காட்டாமல் சீரழித்து விட்டதோடு, தனிச்சொத்துரிமையையும் ஒழிக்கவில்லை; அதன் சர்வ தேசக் கொள்கைப்படி அயல் நாடுகளிலுள்ள ஆட்சி

முறைக்கு விரோதமாய் எழும் புரட்சிச் சக்திகளுக்கு ஆதரவு கொடுக்கவில்லை; போல்ஷிவிக்குகள் தமக்கு எதிரி யான மார்ஷல் சியாங் கெய் - ஷெக்குக்கு இன்னும் உதவி செய்து வருவதைத் தடுத்து நிறுத்தாததற்காகச் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியைக் கலைக்கவில்லை; ரஷ்யாவில் சகல விளைநிலங்களையும் பலவந்தமாய்ப் பொதுச் சொத்தாக்கு தல், தனி முயற்சிகளுக்குத் தடை விதித்தல் ஆகிய அக் கொள்கைகளைக் கட்சி அமுலுக்குக் கொண்டுவரவில்லை; கட்சிக்குப் போதிய நிதி இல்லாதிருந்துங்கூட, வருமான முள்ள தனியுடைமை ஸ்தாபனங்களை எடுத்துக்கொள்ளத் தக்க அளவுக்குக் கட்சி சக்தி பெறவில்லை; ஆனல், தனி யுடைமை முயற்சிகளைத் தாற்காலிகமாக ஆதரிக்கும்படி கட்சி நிர்ப்பந்திக்கப்படுகிறது.

இவ்வாறு சர்க்காரின் புதிய பொருளாதாரத் திட்டம் மார்க்ஸீயத்திற்குத் துரோகம் செய்துவிட்டதாகவும் டிராட்ஸ்கீயவாதிகள் எதிர்ப் பிரசாரஞ் செய்தார்கள்.

கம்யூனிஸ்ட் கட்சி, தனக்கு அடாததில் தலையிட்டு மிதமிஞ்சி விட்டதாகவும், முதலாளித்துவ விவசாய முறைக்கு நஷ்ட ஈடு ஒன்றுங் கொடுக்காமல் ஸோவியத் சர்க்கார் கூட்டு விவசாயக் கொள்கையைப் புகுத்தி வருவ தாகவும் புகாரினும் அவர் தோழரும் கட்சியின்பேரில் குற்றஞ் சுமத்தினர். அங்ஙனம் கட்சியைக் கண்டித்துத் தாக்கினல் நிலமிழந்தவரும் சர்க்காரிலிருந்து நிலம் பெருதவருமான மனப் புழுக்கங்கொண்ட விவசாயிகள் தங்களை ஆதரிப்பர் என்று புகாரின் கட்சியினர் குருட்டு நம்பிக்கை கொண்டிருந்தனர்.

இவ்விரு எதிர்க் கட்சிகளின் முரண்பட்ட இரண்டு

வகைத் திட்டங்களையும் தூரத் தள்ளிவிட்டு, ஸ்டாலின் வகுத்த வழிப்படியே சென்று கம்யூனிஸ்ட் கட்சி நாள் தோறும் வளர்ச்சிபெற்று வந்தது. வாய்ப்பறை வேதாந்தி கள் பிற்காலத்தில் தோன்றக்கூடும் என்பதை அநுமானித் திருந்த லெனின், "ஒரு புரட்சிக் கட்சி, தன் கொள்கைக் கும், தன் வர்க்கத்திற்கும், தன் புரட்சி நோக்கத்திற்கும் பொருத்தமாக முன்னால் அளிக்கப்பட்டிருந்த சலுகை களையுங்கூடப் பறித்துக்கொள்ள முடியும் என்று கூறாமல், இயலுவதை மட்டும் கூறிப் பழைய சலுகைகள் அனைத்தை யும் பறித்துக் கொள்வதே நேர்மையான கடமை ஆகும்" எனக் கூறினார். இப் பொன் மொழிகளோடு, "ஓர் இயக்கத்தில் ஒருவன் பின்தங்கிவிடக் கூடாது. ஏனெனில், அவ்வாறு செய்தால் அவன் பொதுஜனங்களிடமிருந்து பிரிக்கப்படுகிறான். ஆனால், முன் ஓடவும் கூடாது; முன்னால் ஓடினாலும் பொதுமக்கள் தொடர்பு அறுந்து விடுகிறது. ஓர் இயக்கத்தை நடத்திச் செல்ல விரும்பும் ஒருவன், பின்தங்கி விடுபவர்களையும் முன் ஓடுபவர்களை யும் இரண்டு முனைகளில் எதிர்த்துப் போர் புரிய வேண் டும்" என்று ஸ்டாலின் சேர்த்தார்.

இவ்விரண்டு எதிர்க் கட்சிகளின் பிரசாரங்கள் பொது மக்களை ஆர்வமூட்டி எழுப்பிவிடவில்லை. சர்க்காருக்கு விரோதமாக டிராட்ஸ்கியின் கட்சி ஆர்ப்பாட்டங்களை நடத்தியது. அவை பலன் தராது போனதோடு, டிராட்ஸ்கி தப்பிப் பிழைத்ததே அவர் பாக்கியம் என்று எண்ணக்கூடிய அளவுக்கு அவர் ஒரு பெருங் கூட்டத்தில் மாட்டிக்கொண்டார். சர்க்காரின் விவசாயத் திட்டம் பொதுஜனங்களுக்கு மிகத் திருப்தியாக இருந்தாலும்,

நவீனக் கூட்டு விவசாய முறை விசேஷ லாபகரமான தென்று விவசாயிகள் உணரத் தொடங்கிவிட்டதாலும் புகாரின் கட்சியின் கபட நாடகமும் பொதுமக்களை மயக்க வில்லை.

பகிரங்கத் தோல்வியுற்றதும், எதிர்க் கட்சியினர் ஸோஷலிஸத் திட்டத்தைச் சீர்குலைத்துவிட எண்ணினர். முதலாவது, ஐந்து வருஷத் திட்டத்தை இயன்ற அளவு பின்னப்படுத்த அவர்கள் முயற்சித்தனர். இயந்திரங்களைப் பழுதாக்கினர்; விவசாயப் பண்ணைகளில் நெருப்பிட்டனர்; பிரயாண வசதிகளைக் குலைத்தனர். இவ்வித நாச வேலைகளைக் கண்ட கம்யூனிஸ்ட் கட்சி, ஸினோவியெவ், காமெனெவ் ஆகிய இருவரையும் உத்தியோகத்திலிருந்து விரட்டி, டிராட்ஸ்கியை நாடு கடத்தியது. டிராட்ஸ்கி ஒரு போல்ஷிவிக்காக இருந்ததில்லை யாதலால், அவரைத் தேசப் பிரஷ்டம் செய்ததுபற்றி கட்சி கவலைப்படவில்லை. 'தோழர்கள் டிராட்ஸ்கி, ஸ்டாலின் ஆகிய இருவரும் மத்தியக் கமிட்டியில் மிகக் கெட்டிக்காரர்களா யிருந்தார்கள். தோழர் டிராட்ஸ்கி சகல தலைவர்களையும் பார்க்கிலும் திறமையுள்ள புத்திசாலியாக இருக்கலாம்; ஆனால், அவர் கர்வங்கொண்டவர். மேலும், அவர் ஒரு போல்ஷிவிக்கும் அல்லர்' என்று லெனின் முன்னால் எழுதியிருந்தது இங்கே குறிப்பிடத்தக்கது.

ஸினோவியெவ், காமெனெவ் இவர்களைத் துணைக் கொண்டு, தேசப்பிரஷ்ட வாழ்க்கையிலுங் கூட, ஸோவியத் எதிர்ப்பு வேலைகளை டிராட்ஸ்கி கைவிட்டாரில்லை. ஸோவியத் யூனியனின் பிரசித்திபெற்ற தலைவர் ஸ்டாலினைக் கொலை செய்துவிடத் திட்டமிட்டுச் சதி முயற்சிகள்

நடந்தும் வந்தன. அந்தச் சதியாலோசனை காலாகாலத்தில் கண்டுபிடிக்கப்பட்டு உருப்படாதபடி ஒழிக்கப்பட்டது. 1934, டிஸம்பர் 1-ஆம் தேதியன்று, போல்ஷிவிக் கட்சிப் பிரமுகர்களில் ஒருவரான கிரோப் என்பவர் படுகொலை செய்யப்பட்டதன் மூலம் வேறொரு பெருஞ் சதி கண்டுபிடிக்கப்படவே, மேற்கொண்டு சும்மா இருந்தால் பெரிய ஆபத்துக்கள் உண்டாகும் என்று அறிந்த ஸோவியத் சர்க்கார், வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளக் கருதி, சதிகாரர்களை விசாரித்துத் தண்டிக்கும்படி உத்தரவிட்டது.

கோர்ட் விசாரணையில், "கிரோப் கொலையை ஏற்பாடு செய்வதில் முக்கியமான பங்கை நான் ஏற்றுக்கொண்டிருந்தபடியால், நான் ஒரு குற்றவாளிதான்" என்று ஸிநோவியெவ் பகிரங்கமாக நீதி ஸ்தலத்தில் ஒப்புக்கொண்டார். அவர் இவ்வாறு ஒளியாது ஒப்புக்கொள்ளவே நீதிபதி அவர்பேரில் இரக்கங் காட்டிப் பத்து வருஷச் சிறைவாசத் தண்டனை விதித்தார். இக் கூட்டத்தார் திட்டம் போட்டிருந்த இன்னும் பல சதிகள் 1936-ல் வெளியாயின. இந்தத் துரோகக் கும்பல் ரஷ்யாவிலுள்ள சில அந்தரங்க விஷயங்களை ஸோவியத் அரசாங்கத்தின் ஜன்ம விரோதிகளான நாஜி, பாஸிஸ்ட், ஷின்டாய்ஸ்ட்* நாடுகளுக்கு மிக ரகசியமாக அறிவித்துவந்தது; இராணுவ நுட்பங்களும் அறிவிக்கப் பட்டிருந்ததோடு, இயன்ற அளவு ஐந்தாம்படை உதவிகளைச் செய்வதாக வாக்குறுதிகளும் கொடுக்கப்பட்டிருந்தன. ஆகவே, தேசத் துரோகக்

* இயற்கையையும் வீரரையும் வணங்கும் ஜப்பானியக் கட்சி.

கைதிகளின் மறு விசாரணை, பொதுஜனங்களும் சகல ஐரோப்பிய நாட்டுப் பிரதிநிதிகளும் நிறைந்திருந்த பகிரங்க நீதி ஸ்தலத்தில் ஆரம்பமானதும் ஒவ்வொரு குற்றவாளியும் தத்தம் குற்றங்களைப் பகிரங்கமாய் ஒப்புக் கொண்டனர். எனவே, ஸிநோவியெவ், காமெநெவ் உள் படப் பதினறு குற்றவாளிகள், 1936, ஆகஸ்ட் 26-ஆம் தேதியன்று சுட்டுக் கொல்லப்பட்டனர். மறு வருஷம் புகாரின், யகோடா, டுகாசேவ்ஸ்கி ஆகிய மூவரும் அதே கதி அடைந்தனர்.

ஸோவியத் ஸோஷலிஸத்தின் எதிரிகள், 'பகிரங்க விசாரணை' என்பது ஒரு கண் துடைப்பு என்றும், நிர பராதிகளான கைதிகள் கீழ்த்தரமான முறையில் சொக் குப்பொடி போட்டு மயக்கப்பட்டுக் குற்றங்களை ஒப்புக் கொள்ளச் செய்யப்பட்டனர் என்றும், ஸ்டாலினுக்கு டிராட்ஸ்கி மீதுள்ள சொந்த மனத் தாங்கலுக்காக வஞ்சம் தீர்த்துக்கொள்ளவே இவ்வழி ஏற்படுத்தப் பட்டதென் றும், முடிந்தவரையில் ஸ்டாலினுடைய சகல விரோதி களையும் வரிசையாகத் தீர்த்துக் கட்டிப் போல்ஷிவிக் தலைவர்கள் தங்களுடைய இரத்தவெறியை ஓரளவு பூர்த்தி செய்துகொள்வதில் முனைந்து நிற்கிறார்கள் என்றும், ரஷ்யா தேசம் முழுதுமே பெரிய சிறைக்கூடம் என்றும், அங்கே பல்லாயிரக்கணக்கான ஜனங்கள் சித்திரவதை செய்து கொல்லப்படுகிறார்கள் என்றும் பலவிதமாகக் குற்றஞ்சாட்டி, ஸோவியத் சர்க்காருக்கு விரோதமாக உலகம் முழுவதும் தீவிரமான பிரசாரம் செய்ய ஆரம் பித்தார்கள்.

விசாரணையின்போது அனுஷ்டிக்கப்பட்ட ஒழுங்கு

முறைகளைக் களங்கமில்லாத பரிசுத்த ஹிருதயமுள்ள ஒருவர் நுட்பமாய் ஆராய்ந்து பார்த்தால், எதிரிகளின் ஆகாயப் புளுகுகளில் கடுகளவும் உண்மையில்லை என்பதை எளிதில் பகுத்துணரக்கூடும். நடந்த விவரங்களைக் கவனிப்போம்: ஸிநோவியெவ், காமெனெவ், ராடக், புகாரின் ஆகியவர்களின் பிரதான விசாரணைகள் பகிரங்க நீதிஸ்தலத்தில் நடைபெற்றன. அதில் முக்கியமான ஒவ்வோர் ஐரோப்பிய நாட்டின் பிரபல ராஜதந்திர நிபுணர்களும், ஸோவியத் சர்க்காருக்கு அந்தரங்க விரோதிகளாயும் சதிகாலத்தில் கைதிகளின் தோழர்களா யுள்ளவர்களும் பெருங்கூட்டமாக நீதி விசாரணையை ஒவ்வொரு நாளும் தவருது கவனித்துவந்தனர். தங்க ளுடைய துரோகச் செயல்களுக்குப் பரிகாரமாக மரண தண்டனை நிச்சயமாகக் கிடைக்கும் என்று எதிரிகள் திட்ட மாக அறிந்திருந்தும், அவைகளைக் கொஞ்சங்கூட மறுக்கா மல், தாங்கள் குற்றவாளிகள்தாம் என்று பகிரங்கமாக ஒப்புக்கொண்டனர். மேலும், மறு விசாரணையின்போதும் அவர்களில் ஒருவர்கூட இக்குற்றங்களை மறுக்கவில்லை என்பதும் முக்கியமான விஷயம். தவிர, கைதிகள் சிறையி லிருக்கையில், அவர்களை அங்கே துன்புறுத்திக் குற்றத்தை ஒப்புக்கொள்ளுமாறு வற்புறுத்தியதாக அவர்களில் ஒருவர்கூடப் பகிரங்க நீதி சபையில் புகார் செய்யவில்லை. ஆயினும், சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளையைப் போல் சொல்லும்படி செய்துவிடும் ஏதோ ஆச்சரியமான மருந்துகளைப் போல்ஷிவிக்கர் கண்டுபிடித்து, அவற்றை ஆவி ரூபமாகக் குற்றவாளிகளுக்குப் பிரயோகித்ததாயும், அதனுல் அவர்கள் மதிமயங்கிக் குற்றங்களைத் தாமாகவே

ஒப்புக்கொண்டதாயும் உலகத்துப் பத்திரிகைகளின் ஒரு பகுதி, நேர்மைக்கும், மனச்சாட்சிக்கும், பத்திரிகைத் தர்மத்திற்கும் மாறுகத் துஷ்பிரசாரஞ் செய்தது. இதனுல், ஸோவியத் ஆட்சியில் ஏற்கனவே கசப்புத் தட்டியிருந்தவர்களும், கள்ளங் கபடற்ற சாதாரண மக்கள் பலரும், சிறிதும் சிந்தித்துப் பார்க்காமலே, இந்த அசம்பாவிதக் கட்டுக்கதைகளை நம்பினுர்கள்.

துஷ்பிரசாரம் இம்மட்டோடு நின்றுவிடவில்லை. ஸ்டாலினின் சொந்த மனத் தாங்கல்களின்பொருட்டே இந்த உயிர்வதைகள் நிகழ்ந்தன என்றும், ஸ்டாலின் பழிக்குப் பழி வாங்கப்படுவார் என்றும் நாடோடிப் பேச்சுக்கள் நடந்துகொண்டிருந்தன. ஆனுல், இப்புளுகுகளைக் கேட்டு ஸ்டாலின் பயந்துவிடவில்லை. தமக்கென்று கட்டுக் காவல் எதையும் அவர் ஏற்படுத்திக்கொள்ளவில்லை. அவர் உழைப்பாளிகளோடும், போர்வீரர்களோடும், பொது மக்களோடும் எப்போதும்போல் கலந்து உறவாடி வந்தார். நாடக சாலைகளிலிருந்தும், ஜனங்கள் கூடும் பூந்தோட்டங்களிலிருந்தும் அவர் தம் தோழரோடு பேசிக்கொண்டு கவலையற்று நடந்துசெல்வதை நிறுத்தவில்லை. ரஷ்ய மக்கள் அவரை ஒரு சாதாரணத் தோழரைப் போல எண்ணி அன்புகாட்டி அளவளாவிப் பழகி வந்தனர். வெளியே பேசப்படுவதைப் போல அவரைக் கண்டு பயப்படுபவரும், அவரை வெறுப்பவரும் ரஷ்யாவில் யாரும் இல்லை.

நாட்டின் உரத்தை உள்ளிருந்து புழுவைப்போல் அரித்து வந்த சதிக் கூட்டம் ஒழிக்கப்பட்ட பிறகு ஸோவியத் யூனியனில் ஒற்றுமை ஏற்படவே, வலிமை

வளர்ச்சியுறவும், பாஸிஸ எதிர்ப்புக்குப் போதிய சக்தி பெறவும், ஸோஷலிஸத் திட்டத்தை நிறைவேற்றி வைக்கவும் வசதி ஏற்பட்டது. ஸ்டாலின் 1931-லேயே கூறியிருந்த வாக்கு, காரியத்தில் நிறைவேறச் சந்தர்ப்பம் வாய்த்தது. "முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளைவிட நாம் ஐம்பது அல்லது நூறு வருடங்களுக்குப் பின்னால் நிற்கிறோம். இந்தத் தூரத்தைப் பத்து வருஷமாக நாம் குறுக்கிவிடவேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால், நம்மை அவைகள் அழித்துவிடும்" என்ற அவருடைய வாசகத்தின்படி ஸோவியத் ரஷ்யாவின் பல பாகங்களும் ஒன்றுதிரண்டு ஒருமனங்கொண்டு ஊக்கமாக வேலை செய்தன. ஸ்டாலின் தலைமையில் போடப்பட்ட பெரிய தொழில் திட்டங்களும், விவசாயத் திட்டங்களும் குறித்த கால அளவுக்குள்ளாகவே நிறைவேற்றி வைக்கப்பட்டன. இவ்வாறு நாளுக்கு நாள் வலிமை பெற்றுவந்த ரஷ்யாவைக் கண்டு பக்கத்திலே காத்திருந்த பாஸிஸப் பிசாசு சற்றே பின்னடைந்து பதுங்கியது.

உள் நாட்டுத் துரோகிகளை ஒழிப்பதற்காக ஸோவியத் அரசாங்கம் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளைப் பாராட்டி மற்றையோர் கூறிய வாசகங்களைப் பார்க்கினும், ரஷ்யாவில் மாஸ்கோ நகரில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஸ்தானாதிபதியாக இருந்த ஸ்ரீ ஜோஸப் எம். டேவிஸ் எழுதியுள்ளதை இங்கே குறிப்பிட வேண்டியது அவசியம். ஓர் அமெரிக்கப் பத்திரிகையில் அவர் எழுதியிருப்பதாவது: 'பிரசித்திபெற்ற இராஜத்துரோக வழக்கின் விசாரணைகள், 1935-முதல் 1938-வரை நிறைவேற்றப்பட்ட மரண தண்டனைகள், தேசப்பிரஷ்டம் ஆகியவை

யெல்லாம் காட்டுமிராண்டித்தனம், பைத்தியக்காரத்தனம், நன்றி மறத்தல் முதலியவற்றிற்கு உதாரணங்கள் என்று உலகமெங்கும் பிரசாரம் நடந்தது. இப்பொழுது தெரியும் உண்மைகளிலிருந்தும், தஸ்தவேஜுகளைச் சோதித்ததிலிருந்தும், இந்தப் பிரதிவாதிகள் ஜெர்மன் - ஜப்பானியத் தலைமை ஸ்தாபனங்களின் கையாட்களாக இருந்தனர் என்பதைக் கொஞ்சங்கூடச் சந்தேகிக்க முடியாது. இவ்வாறு துரோகத்தை ஒழித்தது ஸ்டாலினும் அவருடைய கூட்டாளிகளும் பெற்றிருந்த பிரமிக்கத்தக்க முன்னறியும் திறமையை வெளிப்படுத்துகின்றது.'

## V

## அயல்நாட்டுக் கொள்கையும் யுத்தமும்

'மார்க்ஸிஸ்ட்களாகிய நாங்கள், அயல் நாடுகளிலுங் கூடப் புரட்சி ஏற்படுமென்று நம்புகிறோம். ஆனால், அந்நாடுகளிலுள்ள புரட்சிக்காரர், அது முடியுமென்று நினைக்கும்போதாவது, அல்லது அவசியம் என்று நினைக்கும்போதாவது, அது தோன்றும். புரட்சியை ஏற்றுமதி செய்யக்கூடும் என்பது முட்டாள்தனம். ஒவ்வொரு நாடும் அவ்வாறு விரும்பினால், அதன் சொந்தப் புரட்சியை ஆரம்பித்துக் கொள்ளும்; அதற்கு விருப்பமில்லையானால் புரட்சியும் ஏற்படாது.'

— ஸ்டாலின்

**1917** அக்டோபரில் ரஷ்ய ஆட்சி போல்ஷிவிக்கர் கைக்கு மாறியதும், தேசிய இனங்கள்* விரும்பினால்

*தேசத்தில் முக்கியமான தனிப் பண்புள்ள மக்களின் இனங்கள்.

ரஷ்ய ஆட்சியிலிருந்து பிரிந்துபோகும் உரிமையை அங்கீ கரிக்கும் சட்டங்களை அடுத்த மாதம் 15-ம் தேதி ஸோவியத் சர்க்கார் பிரகடனம் செய்தது. பழைய ஜார் காலத்து ஏகாதிபத்திய சர்க்காரின் குடியேற்ற நாட்டுக் கொள்கைக்கு முடிவுகட்டும் அறிக்கை ஒன்று ரஷ்யாவிலுள்ள சகல முஸ்லிம்களுக்குமாக அடுத்தஆடு மே 22-ல் வெளியிடப்பட்டது. வெகு காலத்திற்கு முன் னிருந்தே பலவகையில் ரஷ்ய ஆதிக்கியத்தினுல் துன்புற்று வந்த பின்லாந்து, எஸ்தோனியா, லட்வியா, லிது வேனியா, போலந்து ஆகிய நாடுகள் தங்கள் சுயேச்சை யைத் திரும்பப்பெற்றன. அண்டை நாடுகளான துருக்கி, பாரசீகம், ஆப்கானிஸ்தானம், சீனு, ஜப்பான் போன்ற தேசங்களோடு, சரிசமத்துவக் கொள்கைகளைக்கொண்ட நேச உடன்படிக்கைகளை ஸோவியத் சர்க்கார் செய்து கொண்டது. இதனுல், வெளிநாட்டுச் சச்சரவுகள் நீங்கி, சமாதானம் நிலவியது. ஸோஷலிஸ்த் திட்டப்படி நாட் டின் அபிவிருத்திகளில் கவனம் செலுத்த நல்ல சந்தர்ப் பம் கிடைத்தது. யுத்தப் பயமுறுத்தல்கள் ஏற்படாதபடி தடுத்துவிடுவதற்கு இயலாவிட்டாலும், தாற்காலிகமாக நிறுத்திவைப்பதற்கு ஏற்ற முறையில் ஸோவியத் அயல் நாட்டுக் கொள்கைகள் அமைக்கப்பட்டிருந்தன.

1922-ஆம் வருஷத்து உலகப் பொருளாதார மகா நாட்டில், ஸோவியத் பிரதிநிதி சிச்சேரின், ஆயுதக் கட்டுப் பாட்டைப்பற்றிய ஒரு தீர்மானத்தைக் கொண்டுவந்தார். அதை அநுசரித்து, அண்டை நாடுகளின் மகாநாடு ஒன்றும், மாஸ்கோவில் நடைபெற்றது. யுத்த ஆயுதங் களைக் கீழே வைத்துவிடப் பல நாடுகள் விரும்பாததால்,

அந்த இரண்டு ஆயுதப் பரிகரண மகாநாடுகளும் பிரயோஜனப்படாமற் போயினும், 1927-ல் ஒவ்வொரு நாட்டின் எல்லை, கடல், ஆகாய ஆதிக்கியம் ஆகியவற்றிற்காவது ஒரு திட்டமான வரம்பை ஏற்படுத்தும் பொருட்டு ஸோவியத் அந்நிய நாட்டு மந்திரி லித்விநொவ் முயற்சித்தார். இதுவும் உருப்படவில்லை.

இவை யாவும் பயனில்லாது போகவே, ஜெர்மனி, லட்வியா, லிதுவேனியா, பாரஸீகம், ஆப்கானிஸ்தானம், துருக்கி ஆகிய நாடுகளுடன் அனுக்கிரமிப்பு ஒப்பந்தம் செய்துகொள்ளல், யுத்தத்தைச் சட்ட ரீதியாகத் தடுக்கும் நோக்கங்கொண்ட 'கெல்லாக் - பிரியன்ட்' ஒப்பந்தம்* தேசியக் கொள்கையாக ஏற்றுக்கொள்ளப்படுதல் ஆகிய ஏற்பாடுகளைச் செய்து வெற்றிபெற்ற ஸோவியத் சர்க்கார், தற்கால சாந்தியாகச் சமாதானத்தை நிலைநாட்டிற்று.

1929-ஆம் வருஷப் பொருளாதார நெருக்கடியால் சர்வ தேச நிலைமையில் ஒரு பெரும் மாறுதல் ஏற்படவே, ஸோவியத் அயல்நாட்டுக் கொள்கையில் ஒரு தடுமாற்றமும், முதலாளித்துவத் திட்டத்தில் பெரிய பிளவும் தோன்றின. எனவே, பிரான்ஸும், பிரிட்டனும் தம்முடைய ஆதிக்கியத்திலிருந்த பெரிய குடியேற்ற நாடுகளின் கழுத்துகளில் குதித்தேறி உட்கார்ந்துகொண்டன. ஆனால், குடியேற்ற நாடுகளுக்கு வகையற்ற ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய மூன்று நாடுகளும் அதுபற்றி

*ஜெர்மனி அல்லது வேறு நாடு பிரான்ஸை ஆக்ரமிக்காது தடுத்து நிறுத்தும்பொருட்டு அமெரிக்காவும், பிரான்ஸும் செய்துகொண்ட ஒப்பந்தம். இதில் ஜெர்மனி உள்பட பதின்மூன்று தேசங்கள் கையொப்பமிட்டன.

ஓலமிடத் தொடங்கின. இத்தாலி அபிஸீனியாவையும், ஜப்பான் சீனுவையும் தாக்கின. தங்கள் சுயநலங்களுக்காக ஜெர்மனியும் இத்தாலியும் சேர்ந்து ஸ்பெயினில் உள் நாட்டுக் கலகத்தை மூட்டின. நீர்வளம், நிலவளம், கனி வளம் மிகுந்த ரஷ்ய பூமியின்மேல் ஜெர்மனிக்குப் பேராசை வளர்ந்துவந்தது. இது சம்பந்தமாக, ஜெர்மனி யின் நாஜித்தலைவர் ஹிட்லரே தமது 'மெயின் காம்ப்' என்ற படுகொலைப் புராணத்தில் எழுதியிருக்கிறுர். அந்த வாசகம் வருமாறு: "யூரல் மலைகளில் புதைந்து கிடக்கும் எண்ணிறந்த மூலப் பொருள்களின் பொக்கிஷங்களும், ஸைபீரியாவின் அபரிமிதமான மரப் பொருள்களும், உக்ரைனின் மிகப் பெரிய கோதுமை வயல்களும் என்னிட மிருந்தால், தேசீய ஸோஷலிஸத்தின்* தலைமையின் கீழுள்ள ஜெர்மனி சுவர்க்க வாழ்வு வாழும்!"

சுற்றுப் புறங்களில் நிகழும் வெறியாட்ட முஸ்தீப்பு களைப் பார்த்துக்கொண்டு ஸ்டாலின் சும்மா இருக்கவில்லை. சிச்செரின், லித்விநொவ் ஆகியோரின் ஆயுதப் பரிகரணத் திட்டத்தையும், அனுக்ரமிப்பு ஒப்பந்தங்களையும் கிழித் தெறிந்துவிட்டு, ஏகாதிபத்திய வெறிகொண்ட பாஸிஸ்ட் பேயாட்டத்தை எதிர்த்து நிற்க அவர் ஏற்பாடுகள் செய்தார். பொது மக்களுக்கு யுத்த ஆயுதப் பயிற்சி கொடுப்பதற்கேற்ற சரியான சந்தர்ப்பம் அதுதான் என உணர்ந்து அதற்கான வழி வகைகளை வகுக்கத் தொடங் கினுர்.

ஸோவியத் யூனியனைச் சுற்றி எல்லைக் காவலரைப்

*தேசீய ஸோஷலிஸம் என்பது நாஜிக் கொள்கையின் விசித்திரமான முழுப்பெயர்.

போல இயற்கையாய் அமைந்திருக்கும் நாடுகளில், பிளவை உண்டாக்கச் சில ஜனநாயக அரசுகள் கருதின. ரஷ்யா ஒருபுறத்திலும், ஜெர்மனி - ஜப்பான் மறுபுறத்திலுமாகப் பகைமூண்டு முட்டிக்கொள்ளும் என்றும் கருதப்பட்டது. இதையெல்லாம் அறிந்திருந்தும் ரஷ்யா, 1934-ல் சர்வ தேச சங்கத்தில் சேர்ந்தது.

ஸ்டாலின் சர்வ தேச சங்கத்தைப்பற்றி மதிப்புக் கொண்டிருந்தார். ஆனால், பாஸிஸ்ட் ஆக்ரமிப்பைத் தடுத்து நிறுத்தும் பொருட்டு லித்விநொவ் சர்வதேச சங்கத்தில் பிரேரேபித்த கூட்டுப் பாதுகாப்புப்பற்றிய தீர்மானங்கள் யாவும் ஏற்கப்படாமல் கவனிப்பாரற்றுப் போயின. பயனற்ற சித்தாந்தங்கள் பல பேசப்பட்டனவே தவிர, ஒன்றும் சாதிக்கப்படவில்லை. ஆகவே, சர்வதேச சங்கத்தின் நாடித் துடிப்பை நன்கறிந்த அச்சுக் கூட்டாளிகளில் ஒன்றான இத்தாலி, அபிஸீனியாவை அபகரித்துக் கொண்டும், ஸ்பெயினில் கலக நெருப்பை மூட்டிக்கொண்டும் இருந்தது. அச்சின் மற்றொரு கூட்டாளியான ஜெர்மனி யுத்த சாதனங்களையும், யுத்த வீரர்களையும் திரட்டி வைத்துக்கொண்டு முதலாவதாக ஆஸ்ட்ரியாவையும், ஸுடேடன் நாட்டையும், பிறகு ஸெக்கோ-ஸ்லொவேகியா முழுவதையும் கபளீகரம் செய்துவிட்டது.

சங்கக் கொள்கைகள் உருப்படாது போனதை அறிந்த ஸ்டாலின், "போராவேசம் கொண்ட தேசியத்தின் இறுதி நாட்கள் நெருங்கிவிட்டன; புதைக்கப்படுவதற்கு முன் சர்வதேச சங்கம் அழுகிக்கொண்டிருக்கிறது. பிரான்ஸ், பிரிட்டன் முதலிய நாடுகளின் சமாதானக் கொள்

கைகளால் அது ஊட்டி வளர்க்கப்பட்டிருக்கிறது. தான் வாழப் பிறரைப் பலியிட்டே பழகிப்போன யுத்த வெறி யர் நம் நாட்டையும் மோதவிடாதபடி நாம் வெகு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும்” என்று எச்சரித்தார்.

'ஜன நாயக அரசு' என்று கூறிக்கொள்ளும் அரசாங் கங்கள், மெய்ப்புக்கு ஒரு வார்த்தைகூட ரஷ்யாவிடம் கலந்துகொள்ளாமல், ஸெக்கோ - ஸ்லொவேக்கியாவைப் பலியிட்டு, 1938, ஸெப்டம்பர்மீ மியூனிக் ஒப்பந்தத்தின் மூலம் அதன் விதியை நிர்ணயித்தன. போலந்தை ஜெர் மனி பயமுறுத்தியபொழுது, போலந்துக்குத் தேவையுள்ள சகல யுத்த சாதனங்களையும் ரஷ்யா கொடுத்து உதவ வேண்டுமென்றும், ஆனால், ஒரு ரஷ்ய சிப்பாய்கூடப் போலந்து எல்லையைத் தாண்டக் கூடாதென்றும் உபதே சிக்கப்பட்டது. ஆகவே, 'பிறர் வாழத் தான் பலியாகும்' கொள்கையை அநுசரித்து ரஷ்யா தன்னந்தனியே ஜெர்மனியை எதிர்க்கவேண்டும்; அல்லது, தன் எல்லை களுக்கு அப்பாலேயே யுத்தத்தை நிறுத்தி வைக்கவேண் டும். முன்னதைப் பார்க்கிலும் பின்னது தம் நாட்டு நன் மைக்கு ஏற்றதாய்த் தோன்றவும், ஸ்டாலின் அதைத் தழுவி 1939-ல் ஜெர்மனியோடு அனுக்கிரமிப்பு ஒப்பந்தம் செய்துகொண்டு, 'இருதலைக் கொள்ளி எறும்'பைப்போல மாட்டிக்கொள்ளாமல் 'ஜன நாயக அரசு'களின் தலை விதிகளை அவைகளே நிர்ணயித்துக்கொள்ளுமாறு விட்டு விட்டார். இதன் பயனாகத் 'தான் வாழப் பிறரைப் பலி யிடும்' கொள்கை படுதோல்வியுறவும், 'தான் வாழத் தன்னையே பலியிட்டு'க் கொள்ளும் சந்தர்ப்பம் தோன்றி யது. பின்னர், பிரிட்டிஷ் பிரெஞ்சு சாம்ராஜ்யங்களும்,

போலந்தும் ஜெர்மனிக்கு எதிராக இரண்டாவது உலக மகா யுத்தத்தில் மாட்டிக்கொள்ள நேர்ந்தது.

ஜெர்மன் - ரஷ்ய அனுக்கிரமிப்பு ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டதால் தம் தேசத்திற்கு வரவிருந்த ஆபத்து நீங்கி விடவில்லை என்பதும், ஒப்பந்தப்படி ஹிட்லர் கட்டுப் பட்டு நடக்கக்கூடிய ஆசாமி அல்லர் என்பதும், ரஷ்யாவி லும் யுத்த இயந்திரத்தைக் காலத்துக்கு ஏற்றவாறு நவீன முறையில் தயாரித்து வைப்பதற்கு வேண்டிய சொற்ப அவகாசம் மட்டும் கிடைத்தது என்பதும் ஸ்டாலினுக்கு நன்றாகத் தெரியும். ஆகையால், ரஷ்ய எல்லைகளை ஜெர்மன் சைனியங்கள் திடீரென்று தாண்டி வந்துவிடாதபடி காத்துக் கொள்ளக் கருதி, அவர் ரஷ்யாவை ஒட்டியுள்ள போலந்தின் பகுதியையும், பால்கன் நாடுகளையும் தமது தேசத்தோடு சேர்த்துக்கொண்டார். ஆனால், ஜனநாயகங் கள், ஸ்டாலின் - ஹிட்லர் உறவைப் பிரமாதமாகக் கண்டித் தன. என்றாலும், ஸ்டாலினும் ஹிட்லரும் தங்களுக்குள் ஒருவரை ஒருவர் நன்றாக அளந்து அறிந்தே இருந்தனர். 1941, ஜூன் 22-ல், எவ்வித முன்னறிவிப்பும் குற்றச் சாட்டும் கூறாது, ரஷ்யாவின் மீது ஹிட்லர் போர் தொடுத்துவிட்டார். பாஸிஸத்தை எதிர்த்து யுத்தம் புரியக்கூடிய சமயம் ஏற்படும் என்று முன்கூட்டியே தீர்மானித்து வைத்திருந்த ஸ்டாலின் யுத்தம் மூண்டதைக் கண்டு திடுக்கிடவில்லை.

ஸ்டாலினுடைய அறிவின் மாண்பையும், முன்னேற் பாடுகள் செய்துவைக்குந் திறனையும் நாம் போற்றாதிருக்க முடியாது. ரஷ்யாவில் விவசாயத் திட்டத்தை மிகப் பொருத்தமாக அவர் அமைத்ததும், டிராட்ஸ்கி போன்ற

வர்களின் கூக்குரலைக் கேட்டு உலகப் புரட்சிக்கு ஆதரவு கொடாமல் தாற்காலிகமாக அதை நிறுத்தி வைத்ததும், சீனத் தலைவர் மார்ஷல் சியாங் கெய் - ஷேக்கை ஆதரித்து உதவி புரிந்ததும், தேசத் தற்காப்புக்காகப் பாதிப் போலந்தையும் பால்கன் நாடுகளையும் அவற்றின் சம்மதம் பெற்று ரஷ்யாவோடு சேர்த்துக்கொண்டதும், 1939-ல் ஹிட்லரோடு அனுக்கிரமிப்பு ஒப்பந்தம் செய்துகொண்டதும், இன்று (1944-ல்) அச்சு நாடுகளை எதிர்த்து அவர் யுத்தம் புரிவதும் தீர்க்காலோசனையுடன் செய்யப்பெற்ற கிரமமான காரியங்களாகும். எனவே, ஸோவியத் யூனியன் என்ற கப்பலின் சுக்கான் அவருடைய கையில் இல்லாதிருந்திருக்குமானால், கப்பலின் கதி என்னவாகியிருக்கும் என்பதை அதனிடம் அநுதாபமுள்ள ஒருவர் சிந்திப்பதற்கே பயப்படுவர்.

ஸோவியத் யூனியனுக்கும் பின்லந்துக்கும் ஏற்பட்ட பிணக்குகளின் காரணங்கள் மிக முக்கியமானவை. அவற்றை, வெறுப்பு விருப்புக் கொள்ளாமல், நடு நிலைமையில் ஆராய்ந்து பார்த்தல் அவசியம். பின்லந்து ஜார் காலத்து ரஷ்யாவின் ஒரு மாகாணமாக இருந்தது. புரட்சிக்குப் பிறகு போல்ஷிவிக்குகள் 1918, ஜனவரி 4-ஆம் தேதி அதன் சுயநிர்ணய உரிமையை அங்கீகரித்து அதற்கு விடுதலை அளித்தார்கள். பிரிந்து செல்ல விடாதபடி அதைத் தடுத்திருக்கலாம். அவசியம் ஏற்பட்டால், யுத்தம் தொடுத்தாவது அதை அடக்கி யாண்டிருக்கலாம். அவ்வாறு செய்யாமல், உலகம் தோன்றிச் சரித்திரம் எழுதத் துவங்கிய காலந்தொடுத்து இன்றுவரை நடைபெற்று வந்த வழக்கத்திற்கு நேர்மாறாக, லெனின் காலத்

தில் பின்லந்துக்கு விடுதலை அளிக்கப்பட்டது. பின் லந்து மக்கள் ரஷ்யரிடம் அளவு கடந்த நன்றி விசுவாசத் தோடு நடந்து கொள்வார்கள் என்று லெனின் எதிர் பார்த்திருந்தார்.

பின்லந்தின் ஸோவியத் குடியரசு மிகக் குறுகிய காலந் தான் நிலைத்திருந்தது. புதிதாக அளித்த விடுதலையைப் பாதுகாத்துக் கொடுப்பதில் பின்லந்துத் தோழர்களுக்கு உதவி செய்ய முடியாதவாறு போல்ஷிவிக்கருக்குத் தம் சொந்த நாட்டில் அளவு கடந்த வேலைகள் இருந்தன. அப்பொழுது பின்லந்தில் பாஸிஸ்ட் இயல்புள்ள ஜெனரல் மானர்ஹீம் அந்நாட்டின் தலைவராக இருந்தார். அவர் தலைமையில் அந்நாட்டு நிலச்சுவான்தார்கள் ஜெர்மன் உதவியை நாடினார்கள். உடனே, ஜெனரல் வான் டேர் கோல்ட்ஸ் ஜெர்மன் படைகளோடு வந்து சேர்ந்தார். உயர்ந்த யுத்தப் பயிற்சியும், நவீன யுத்த சாதனங்களும் பெற்றுள்ள இக்கூலிப் படைகளைக் கற்றுக்குட்டிகளான பின்லந்தின் உழைப்பாளர் படைகளால் எதிர்த்து நிற்க முடியாமல் அவை ஓட்டம் எடுத்தன. இதைக் கண்டு குதூ கலம் அடைந்த மானர்ஹீம், ஜெனரல் கோல்ட்ஸுக்குத் தலை தாழ்த்தி வணக்கம் செலுத்தினார். பிறகு, ரஷ்ய எல்லையிலிருந்து போல்ஷிவிக் பயமுறுத்தல் ஏற்பட்டு விடாதபடி தடுக்கும்பொருட்டு அதில் கவனம் செலுத்தத் தொடங்கினார்.

அவர், தம் தேசத்திலிருந்த தீவிரவாதிகளை அழித்து விடக் கருதி, அபேதவாதிகளில் முப்பதினாயிரம் பேரைச் சிறைப்பிடித்துப் படுகொலை புரிந்தார். மேலும் உழைப் பாளர் வீடுகளைக் கொள்ளையடித்துப் பாழாக்கி, அவர்கள்

மனைவி மக்களை நையப் புடைத்து, பட்டினி பசியால் வாடி வதங்கிப் பனியில் கிடந்து செத்தொழியும்படி தெருக்களில் விரட்டி, அவர் தமது தேச கைங்கரியத்தின் இரண்டாவது அருஞ் செயலை நிலை நாட்டினர். அவருடைய ஆட்சியின் ஆரம்ப காலத்தைப் 'பயங்கர ஆட்சிக் காலம்' என்று அழைக்கலாம்.

இக்கொடிய செயல்களோடு மானர்ஹீமின் ஸோவியத் எதிர்ப்பு மனப்பான்மை முற்றுப்பெறவில்லை. ஆகவே, எங்கும் பரவத் துவங்கிய 'செந் தொற்று நோய்'* பரவவிடாதபடி வெற்றிகரமாய்த் தடுக்க வேண்டுமானல், மாஸ்கோவிலிருந்த ஸோவியத் சாக்காரின் சல்லி வேர் உள்படக் கல்லி எறிந்துவிட வேண்டும் என்ற பேருண்மையைக் கண்டுபிடித்தார்! எனவே, ஸோவியத் விரோதிகளான எதிர்ப் புரட்சிப் படைகளோடு சேர்ந்து கொண்டார். பின்லந்திலிருந்து யூரல் மலைகள் வரை தம் தேசத்தின் எல்லைகள் பரந்து கிடப்பதாக அவர் கனவு கண்டு, சாதாரணமான சிறு பின்லந்து நாடு மிகவும் விஸ்தீரணமடைந்து 'மகா பின்லந்து' ஆகிவிடப் போவதாக ஆசைகொண்டு, அதற்கேற்ற சுலோகத்தைக் கோஷிக்கத் தொடங்கினர்.

ஆனல், அடாத செயல்களும், அட்டூழியங்களும் மானர்ஹீமின் 'மகா பின்லந்து' என்ற ஆகாயக் கோட்டையைத் திரிசங்கு சுவர்க்கமாக்கின. ஸோவியத் யூனியன் கம்பந்தப்பட்டமட்டில், பகற் கனவில் தோன்றும் ஓர் உருவமாகவே மானர்ஹீம் கருதப்பட்டு வந்தார்.

* செந் தொற்று நோய் - ஸோவியத் ரஷ்யாவின் கம்யூனிஸம்.

யார் என்ன நினைத்தாலும், அவருடைய மனோராஜ்யங்கள் வளர்ந்தே வந்தன. ஆகவே, ஸோவியத் எல்லைகளை ஒட்டி, அதிகப் பலம் பொருந்திய ஓர் அரணை அவர் நிர்மாணித்து; மிகச் சமீபத்திலிருந்த லெனின்கிராடின்மேல் வெகு எளிதாகக் குண்டு வீச வசதியா யிருக்கும்படி பல ஆகாய விமான தளங்களையும் அமைத்தார். அவர் அமைத்த அரணுக்கு 'மானர்ஹீம் அரண்' என்று பெயர். அவர் தாம் போல்ஷிவிக்கரின் மகா விரோதி என்று புகிரங்கப் படுத்திக்கொண்டு, நாஜிகளுடன் நெருங்கி உறவாடி வந்தார். முடிவாக, 1939-ஆம் வருஷத்தின் பிற்பகுதியில், ஹால்டர் என்ற முக்கியமான ஜெர்மன் இராணுவ அதிகாரி வசம் பின்லந்தின் பாதுகாப்பு பொறுப்பு முழுவதையும் அவர் ஒப்பிக்க நேர்ந்தது.

இனி, ஸோவியத் - பின்லந்து உறவைச் சற்று கவனிப்போம். பின்லந்தில் தலைமை வகித்தவர்களின் நன்றிகெட்ட செயல்களையும், அந்நாட்டின் விரோத மனப்பான்மையையும், வஞ்சம் தீர்த்துக்கொள்ள அது சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் கொண்டிருப்பதையும் வெகு காலமாகக் கவனித்து வந்த ஸ்டாலின், தம் நாடு சம்பந்தப் பட்ட சில விஷயங்களைப்பற்றிய சந்தேகங்களை நிவர்த்தி செய்துகொள்ள எண்ணி, ஆலந்தா தீவுகளைப் பொறுத்த மட்டில் பின்லந்தின் மனப்பான்மையை அறிந்துகொள்ள ஆசைப்பட்டார். ஆலந்தா தீவுகளின் ஸ்தானம் மிக முக்கியமானது. ரஷ்ய எல்லைப் புறங்களிலுள்ள ஆர்க்டிக் சமுத்திரமும், வெண் கடலும் மழைக்காலத்தில் பனியால் உறைந்து போவதால், கப்பல் போக்கு வரத்துக்குப் பிரயோசனப் படுவதில்லை; பாஸ்பரஸ் ஜலசந்தி எதிரி

கைக்குப் போய்விட்டால், கருங்கடல் ஓர் ஏரிக்கு ஒப்பான தாக ஆகிவிடுமே யொழிய அதைக் கடலாக உபயோகிக்க முடியாது. ஆகையால், ஸோவியத் யூனியனுக்கு அவசிய மான கடல் போக்குவரத்துக்குப் பால்டிக் கடல் ஒன்றைத் தவிர வேறு வழி இல்லை. ஆதலால், பால்டிக் கடலின் தலைவாசல் காவலரைப்போல அமைந்திருந்த ஆலந்தா தீவுகளின் கரையோரப் போக்குவரத்து உரிமைகளைப் பற்றித் தெளிவுபடுத்திக்கொள்ள ஸ்டாலின் முற்பட்டார்.

ஆதிகாலத்தில் இத்தீவுகள் ரஷ்யாவுக்குச் சொந்த மானவைகளாக இருந்தும், 1856-ல் ஏற்பட்ட 'பாரிஸ் ஒப்பந்த'ப்படி, ரஷ்யா அவற்றில் அரண் கட்டாமல் நிறுத்திவிட்டது. ரஷ்யப் புரட்சிக்குப் பின்னர் இத்தீவுகள் பின்லந்துக்குக் கிடைத்தன. ஆலந்தா தீவுகளிலிருந்த பெரும்பான்மையான மக்கள் ஸ்வீடன் தேசத்தவர்களா யிருந்துங்கூட, பின்லந்துக்காரர், 'பாரிஸ் ஒப்பந்த'ப் படத்தைக் காட்டி, அத்தீவுகள் தங்களுடையவை என்று பிடிவாதம் செய்தே வந்தார்கள்.

ஸ்வீடன் நாட்டு ஜனங்கள் தம் உரிமைகளை வெளி யிடக்கூட இடங்கொடாது மானர்ஹீம் 'அவர்களை வாயடைத்து வந்தார். மேலும், ரஷ்யப் போர்க் கப்பல் கள் ஆலந்தா தீவுகளை எட்டிக்கூடப் பாராதபடி பல நிர்ப் பந்தங்களைச் சுமத்தியும் வந்தார். 'மகா பின்லந்து'க் கொள்கையைக் காற்றில் பறக்கவிட்டுவிட்டு, அத்தீவுகளில் அரண் கட்டுவதற்குரிய உரிமைகளைப்பற்றிக் கூக்குரலிட்டு வந்தார். அத்துடன் நிற்காமல், கிழக்கே கரேலியாவில் ஸோவியத் எல்லைப் பகுதியையும் கேட்கத் தொடங்கினர் இவ்வுரிமைகள் யாவற்றையும்பற்றி அவர் பக்கத்து நாடுக

ளுடன் அந்தரங்கமாய்க் கலந்துகொண்டார். ரஷ்ய நாட்டின் ஐக்கிய ஸோவியத் ஸோஷலிஸ்ட் குடியரசுக்கு (U. S. S. R) விரோதமாய்க் கூட்டு நடவடிக்கைகள் எடுப்பதற்காக அவர் 1935-ல் ஜெர்மனி, போலந்து, ஹங்கேரி ஆகிய நாடுகளோடு பேச்சு வார்த்தைகளையும் ஆரம்பித்தார்.

ஜனநாயக அரசுகளுக்கும், ஜெர்மனிக்கும் 1939-ல் யுத்தம் மூண்டதும், சீக்கிரத்திலோ, அல்லது சிறிது காலங் கழிந்தோ, ஸோவியத் நாடும் போராட்டத்தில் பங்கெடுத்துக்கொள்ளும்படி ஏற்படும் என்று ஸ்டாலின் கருதினர். மானர்ஹீமின் பாஸிஸ ஆதரவு மனப்பான்மையும், ஸோவியத் விரோத நடவடிக்கைகளும், ரஷ்யரை மிகவும் புண்படுத்தின. எனினும், ஸ்டாலின் நேச முறையில் பேச்சு வார்த்தைகளைத் தொடங்க எண்ணினர். பின்லந்தின் பாத்தியதைகளுக்கு அதிகமாகவே அளிக்கவும் முன்வந்தார். ஆலந்தா தீவுகளில் அரண் அமைத்துக் கொள்ளலாம் என்றும், கரேலியாவின் பெரும் பகுதியை அது எடுத்துக்கொள்ளலாம் என்றும் உறுதி கூறினர். அவைகளுக்குப் பதிலாக, லெனின்கிராட், மூர்மான்ஸ்க் எல்லைப்புறங்களைச் சில மைல் தூரம் மேற்கே தள்ளி அமைத்துக் கொள்ளவேண்டும் என்றும், கிரன்ஷாட் தீவுகளில் மிகச் சிறியவைகளையும், பின்லந்து வளைகுடாவில் பிரவேசப் பாதையான இடத்தில் ஒரு கப்பல் தளத்தையும் கொடுக்கவேண்டும் என்று அவர் வேண்டுகோள் ஒன்றை விடுத்தார். பின்லந்திடமிருந்து தாம் கேட்ட விஸ்தீரணத்தைவிட, இரண்டு மடங்குக்கு அதிகமான நிலப் பரப்பைக் கொடுப்பதாக உறுதி கூறியதோடு

தாம் விரும்பும் யாவும் யுத்த நிலைமைகளை உத்தேசித்தே கேட்கப்படுவதாகவும் அவர் தெளிவாக்கினர்.

ஆனல், மானர்ஹீம் இத்தகைய சமாதான ஏற்பாடு களுக்கெல்லாம் செவி சாய்க்காமல், ரஷ்யா தலை கொழுத்துப் போய்த் தங்கள்பேரில் இல்லாத பொல்லாத நிர்ப்பந்தங்களைச் சுமத்துவதாகவும், ஸ்டாலினின் ஏற்பாடுகளுக்கு இணங்குவதைவிட யுத்தம் செய்யத் தயாராய் இருப்பதாகவும் உலக மக்களுக்கு அறிவித்தார். இதை அநுசரித்து, ஸோவியத் படைகள், பின்லந்தின் எல்லைகளில் புகுவதாகக் குற்றங்கள் சாட்டினர். எல்லைப்புறங்களில் அடிக்கடி இரு நாட்டுப் படைகளுக்கும் கைகலப்புகள் பல நிகழ்ந்தன. இறுதியாக, பின்லந்துப் படைகள் தம் எல்லைகளைக் கடக்கவே, ஸோவியத் ரஷ்யாவுக்கும் பின்லந்துக்கும் யுத்தம் துவங்கியது.

ஐரோப்பா, அமெரிக்காவிலுள்ள சகல நாடுகளும், யுத்த வீரர்களையும், யுத்த சாதனங்களையும் பின்லந்துக்கு அனுப்பி உதவி புரிந்தன. செஞ்சேனையும், அதன் ஆகாயப் படையும் சுத்த சோதாவானவை என்றும், ஸோவியத் ஜெனரல்கள் யுத்தக் கலையே அறியாத தடிபோடுவதற்கேற்ற ஆசாமிகள்தாம் என்றும், பின்லந்துச் சேனைகளுக்கோ வெற்றிக்குமேல் வெற்றி கிட்டி வருகிறதென்றும், முதலாளித்துவப் பத்திரிகைகள் சில மாத காலம் புகழ்ந்து பிரமாதப்படுத்திப் பிரசுரித்து வந்தன. எவ்வளவு காலந்தான் உலக வாயை உலை மூடியால் மூடிவிட முடியும்? கெட்டிக்காரன் புளுகு சில நாட்களே செல்லும். மானர்ஹீமின் சொந்த மூளையால், சொந்தத் திட்டப்படி, சொந்தப் பார்வையிலேயே வெகு நுட்பமாய்

ஆராய்ச்சி செய்து கட்டப்பெற்று, அவருடைய பெயரைத் தாங்கி நின்ற 'மானர்ஹீம் அர'ணின் கதி என்ன வாயிற்று? ஸோவியத் வீரர் நெருங்கிய க்ஷணமே, ஓர் இடத்திலல்லாமல், பல இடங்களில் சல்லி சல்லியாய்ச் சல்லடைக் கண்களைப்போல் துளைக்கப்பட்டுவிட்டது. பின்லந்துப் படைகள் தங்கள் ஆயுதங்களைக் களத்திலே போட்டுவிட்டு, ஸோவியத் ஜய வீரரின் பாதாரவிந்தங்களில் விழுந்து பணிந்ததையும், முதலாளிகள் ஆதிக்கியத்திலிருந்த பத்திரிகைகள் மேலும் பொத்திவைக்க முடியுமா? ஸோவியத் ஜயபேரிகையின் முழக்கம் மின்சார வேகத்தில் உலகம் முழுவதும் பரவிற்று.

வெற்றி வீரரான ஸ்டாலின், பழைய வெர்ஸெய்ல்ஸ் ஒப்பந்தத்தைப் பின்பற்றி, தோல்வியுற்ற பின்லந்தின் குரல்வளையை நெறித்திருக்கலாம். அப்படித்தானே ஹிட்லர் ஸெக்கோவைச் செய்தார்! ஆனால், அது அகில உலக சகோதரக் கொள்கைக்கு நேர் விரோதமானது. ஆகையால், யுத்தத்திற்கு முன் சமாதான காலத்தில், ரஷ்யாவுக்கு எந்தப் பகுதிகள் வேண்டுமென்று கேட்டாரோ அவற்றை மாத்திரம் எடுத்துக்கொண்டு, தாம் ஜயித்த பெரும் பகுதியைத் திரும்பவும் அவர்களுக்கே கொடுத்துவிட்டார் தயாளுவான ஸ்டாலின்: அத்துடன் பின்லந்துக்கு மறுபடியும் விடுதலையையும் கொடுத்தார்! என்றாலும், அது நன்றியை மறந்தது. 1941-ஜூனில் தோன்றிய ஸோவியத் - ஜெர்மன் யுத்தத்தில் அச்சு நாடுகளோடு அது சேர்ந்துகொண்டு, தான் இழந்த இடங்களை ஜெர்மன் ஆதரவினால் கைப்பற்றிக் கொண்டதோடு திருப்தி அடையாமல், ரஷ்யாவை எதிர்த்து மேலும்

யுத்தம் செய்துவந்தது. பின்லந்து சம்பந்தப்பட்ட மட்டில் ரஷ்யா செய்த மகத்தான தவறு என்ன? அது அந்நாட்டில் ஜயக்கொடி நாட்டிய அன்றே, பிற வல்லரசு களைப்போல, இரும்புக் கரங்களை நீட்டித் தன் கை வரிசை களைக் காட்டாமல், அன்பு பொங்கும் சகோதரக் கரத்தால் அணைத்து விடுதலை கொடுத்ததுதான் பெருந் தவறு?

"உலகத்திலேயே, சக்தி மிகுந்த தரைப்படையும், சக்தி மிகுந்த டாங்க் படையும், சக்தி மிகுந்த விமானப் படையும் ரஷ்யா வைத்திருக்கிறது. இவை, புறக்கணிக்கக் கூடாத உண்மைகள்" என்று லண்டன்டெர்ரி பிரபுவோடு நடத்திய சம்பாஷணையின்போது ஹிட்லர் ஒரு சமயம் கூறிய உண்மையை பின்லந்துப் போரிலேயே உலகம் ஓரளவு கண்டுகொண்டது.

## VI

## பாட்டாளி பங்காளர்

'உழைப்பாளரின் லட்சியத்திற்காக, சுயசிரம ஜீவி களின் புரட்சிக்காக, அகில உலகக் கம்யூனிஸத்திற் காக, என் சகல சக்திகளையும், என் சகல சாமர்த்தியங் களையும் இன்னும் அர்ப்பணம் செய்யவும், அவசியப் பட்டால், என் இரத்தத்தில் கடைசித் துளியையும் கொடுக்கவும் சித்தமாக இருக்கிறேன் என்பதில், தோழர்களே, நீங்கள் சந்தேகங்கொள்ள வேண்டாம்!"

— ஸ்டாலின்

ஸ்டாலின் ஸோஷலிஸ்ட் ஆனதேன்?

"அதன் கிரமமான முறைகள் இன்னின்னவை என்று விவரிப்பது அதிகக் கஷ்டமான காரியம். முதலாவதாக:

இப்பொழுதிருக்கும் முறைகள் தப்பானவை, நியாய மற்றவை என்று ஒருவன் நிச்சயமாக உணரவேண்டும். இவற்றைக் காணும் ஒருவன், இவைகளை ஒழித்துவிடத் தன்னால் இயன்ற அளவு முனைந்தே தீருவது என்று திட சங்கற்பம் செய்துகொள்ள வேண்டும். அக்காலத்திய ரஷ்ய முதலாளித்துவம், உலகத்தில் வேறெங்கும் காண முடியாத அவ்வளவு பயங்கரமான மிருகத்தனம் படைத்த தாய் இருந்தது. மேலும் ஜார் சர்க்கார் கொடுமையும், அநீதியும், தகுதியின்மையும் கொண்டிருந்தது. நிற்க, என் தந்தையார் பூட்ஸ் தொழிற்சாலையில் ஒரு தொழிலாளி; என் தாயுங்கூட ஒரு விவசாயப் பாட்டாளி; என் பெற்றோரின் காலத்தில் சமூகப் பொருளாதார நிலை எந்த அளவில் இருந்ததோ அதே மட்டத்தில்தான் என் காலத்திலும் இருந்தது. நான் சில வருஷங்கள் தங்கியிருந்த வைதிகக் கிறிஸ்துவக் கல்லூரியின் கத்தோலிக்க அடக்கு முறையும், பொறுக்க முடியாத ஆசார அனுஷ்டானங்களும், என்னைச் சுற்றிக் கவிந்திருந்த புரட்சிப் புகைச்சலும் இறுதியாக ஒன்று திரண்டு, என்னை மார்க்ஸிஸ்ட் ஆக்கின. அவைகளுக்கெல்லாம் வந்தனம்! ஜாரின் கொடுமைகளுக்கு எதிராகத் துவேஷம் நிறைந்த சுற்றுச் சார்புகள் புரட்சிப் பணியில் ஹிருதய பூர்வமாக என்னைக் குதிக்கச் செய்தன" என்று ஸ்டாலினே மேற்கண்ட கேள்விக்குப் பதிலளித்தார்.

ஸ்டாலின் ஸோஷலிஸ்ட் தலைவர் ஆனதேன்?

மத நம்பிக்கையைவிட மார்க்ஸிஸத்தில் ஸ்டாலின் அதிக உறுதி கொண்டிருந்தார். புரட்சியின் ஞான ஸ்நானம் பெற்ற ஆரம்ப நாட்களில் அவர் கைதுசெய்யப்பட்டு

ஸைபீரியாவில் தேசப் பிரஷ்டமாயிருந்த நிலையில், காவலை மீறித் தப்பி ஓடிவந்துவிடவே, அவரைத் தேடிப் பிடித்துத் துன்புறுத்தும்படி சிறை அதிகாரிகள் உத்தரவிட்டிருந்தனர். அவர் பிடிபட்டதும், துப்பாக்கி ஏந்திய சிப்பாய்களின் இரண்டு வரிசைகளுக்கு நடுவில் அவரை நடக்கச் செய்து, துப்பாக்கிகளின் அடிக்கட்டைகளால், ஈவு இரக்கமில்லாமல், முதுகில் ஓயாது மாறி மாறி அடித்துக் கொண்டே அழைத்துச் சென்றனர். இதையொத்த சரீர சிட்சை பலரின் உயிரை மாய்த்திருக்கிறது; சிலரின் அறிவைக் கெடுத்துப் பைத்தியம் பிடிக்கும்படியும் செய்திருக்கிறது. எனினும், இத்தகைய சித்திரவதைகளுக்கு உட்பட்ட ஸ்டாலின், கொஞ்சங்கூட அஞ்சவும் இல்லை, தலை தாழ்த்தவுமில்லை. மேலும், இவைபோன்ற கொடிய ஹிம்சைகளை ஏற்றுக்கொள்வது எளிதன்று. குதிக்கு முன் யோசித்து, பிறகு, "வந்தது வரட்டும்" என்று குதித்து, உருக்குப்போன்ற நெஞ்சுறுதியுடன் இருக்கவேண்டும். காரியம் மிக நியாயமானதென்று திட்டமாக அறிந்த பிறகு, அதற்கு ஒருவன் தன்னையே அர்ப்பணம் செய்துவிடவேண்டும். இந்த இரண்டு விசேஷ குணங்களுமே ஸ்டாலினுக்கு ஊக்கமூட்டி உதவி புரிந்து, தலைமைப் பணிக்குத் தகுதியை உண்டாக்கின.

பொதுமக்கள் தொடர்பாவது, அல்லது தனி மனிதர் தொடர்பாவது இல்லாமல் ஸ்டாலின் எப்பொழுதுமே இருந்தது கிடையாது. ஜெனரல் யுடெனிக் தலைமையில், எதிர்ப் புரட்சிப் படை 1919-ல் பீட்ரோகிராடைப் பயமுறுத்திற்று. எப்பாடு பட்டாவது பீட்ரோகிராடைக் காத்துத் தீரவேண்டும் என்று லெனின் சொல்லி அனுப்பி

ஞர். முந்திய யுத்தங்களால் களைத்துப் போயிருந்த தொழிலாளர் படை, முன்னேறிவரும் எதிரிகளைத் தாற்காலிகமாகத் தடுத்து நிறுத்தச் சென்றது. என்றாலும், அதற்குப் போதிய உணவும் உடையும் கொடுக்கப்படாததால், அது சென்ற காரியத்தைச் சரியானபடி நிறைவேற்ற முடியவில்லை. மேலும், படை நன்கு கவனித்துப் போஷிக்கப்படவில்லை என்றும், வசதியான உடைகள் இல்லாததால் பாதுகாப்பு அரண்களில் பனியால் வாடி வதங்க வேண்டியிருந்ததென்றும், சேனைத் தலைவர்கள் தாம் யுத்தத்தில் கைப்பற்றிய பொருள்களைப் பங்கிடுவதில் முனைந்திருந்தார்கள் என்றும், கவனிப்பாரற்ற சேனையோ, தொடர்ந்து யுத்தத்தை நடத்த ஆவல் கொள்ளவில்லை என்றும் வதந்திகள் உலாவிவந்தன.

உடனே லெனின் ஸ்டாலினிடம் துருப்புச் சீட்டைக் கொடுத்துப் பீட்ரோகிராடுக்கு அனுப்பிவைத்தார். ஸ்டாலின் யுத்த களத்தை அடைந்ததும், சேனைகளை அணி வகுத்துப் பார்வையிடத் தொடங்கினர். சேனையில் கடுகடுப்பும் கலக மனப்பான்மையும் குடிகொண்டிருந்ததை அறிந்த ஸ்டாலின், ஏதோ தவறு ஏற்பட்டிருக்கிறதென்று உணர்ந்தார். சிப்பாய்கள் வரிசையாக அவருக்கு வந்தனம் செய்து நின்றனர். ஸ்டாலின் தம் கையைத் தூக்கிய வண்ணம் பதில் மரியாதை செலுத்திக்கொண்டு பார்வையிட்டு வருகையில், ஒரு சிப்பாய் வணக்கம் தெரிவியாமல் நின்றான். அவர் அதைப் பார்த்ததும் மேலே செல்லாது திடீரென்று நின்றுவிட்டார். மற்றச் சிப்பாய்கள் யாவரும் நடுங்கிப் போயினர். ஸ்டாலின் ஒழுங்காக மிகவும் கண்டிப்பாகக் கவனிப்பவர் என்று பெயர் பெற்றிருந்தார். ஆயி

னும், அந்தச் சிப்பாயை இராணுவக் கோர்ட்டுக்கு அனுப்பி, அவனுடைய இராணுவ ஒழுங்கீனச் செய்கைக்குத் தக்க தண்டனை விதிக்கும்படி அவர் உத்தரவிட்டாரா? இல்லை! அதற்கு மாறாக, அவர் அந்தச் சிப்பாயை அணுகி, அவனுடைய செய்கைக்குக் காரணம் என்ன என்று கேட்டார். அவன் வாய்திறந்து பேசவேயில்லை. ஆனால், தன் பாதங்களை மாத்திரம் சுட்டிக் காட்டினான். பாதங்களோ, பூட்ஸ்களுக்குப் பதிலாக வெறும் சாக்குத் துண்டுகளால் சுற்றிச் சுற்றிக் கட்டப்பட்டிருந்தன. இதைக் கண்ணுற்ற ஸ்டாலின், தாம் அணிந்திருந்த இராணுவ பூட்ஸ்களை அவிழ்த்து, அந்தச் சிப்பாயைத் தன் சாக்குத் துண்டுகளையும் அவிழ்க்கச் சொன்னார். தம்முடைய பூட்ஸ்களை அவனுக்குக் கொடுத்து, அவனுடைய சாக்குத் துண்டுகளை அவர் வாங்கித் தம் கால்களில் சுற்றிக்கொண்டார். பீட்ரோகிராட் யுத்தம் வெற்றிகரமாக முடியும்வரையிலும் ஸ்டாலினின் கால்களில் அந்தச் சாக்குத் துண்டுகளே சுற்றப்பட்டிருந்தன.

ஒரு பெரிய தேசத்தின் தலைவரான பிறகு, இன்றுங் கூட, ஸ்டாலினுடைய உயர் குணங்களில் சிறிதும் மாற்றமில்லை. தோழர் ஒருவர் ஜுரமாயிருப்பதாக அவர் கேள்விப்பட்டால், வெண்ணெய், பாலாடை, தேன் ஆகிய சத்துப் பொருள்களோடு தம் அன்புச் செய்தியையும் அனுப்புவது இன்றும் அவர் வழக்கம். "சாப்பிடும், சுகம் பெறும்; நீர் எங்களுக்குத் தேவை" என்று அந்தச் செய்தியில் குறிப்பிடுவார். நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளியாயினும், உயர் நீதி மன்றத்தின் அதிகாரியாயினும் அவர் வித்தியாசம் பாராட்டுவதே கிடையாது.

அவரது முயற்சிகளில் அவருக்குச் சந்தேகம் உதித்த தில்லை; பயம் என்பதையும் அவர் அறியார். 1941, நவம்பரில் ஜெர்மன் சேனைகள் மாஸ்கோ நகரின் தலைவாசலை நெருங்கிவிட்டன. அச்சமயம், ஆயிரக்கணக்கான செஞ்சேனை வீரர் தம் தலைவர் ஸ்டாலின் முன்னிலையில் அணி வகுத்து நின்றனர்; "ஜெர்மானியர் மாஸ்கோவைக் கைப் பற்றிக் கொண்டால் என்ன செய்வீர்?" என்று ஸ்டாலினிடம் சிலர் கேட்கவே, "அதைத் தகர்த்து நொறுக்கித் தரைமட்டமாக்குவேன்!" என்று கம்பீரமாகப் பதிலளித்தார். ஆனால், பகைவர் மாஸ்கோவைக் கண்களால் கூடப் பார்க்கும்படி விடப்படவில்லை. அங்கிருந்து அவர்கள் புற முதுகு காட்டி ஓடும்படி செஞ்சேனை விரட்டியது. ஆயினும், ஸ்டாலின் 'தரைமட்ட மாக்குவேன்' என்று கூறிய வீர வாக்கு வேறோரிடத்தில் நிறைவேற்றிக் காட்டப் பட்டது. ஸோவியத் மக்களின் கௌரவம் மிக்க குல விருதுக்கு ஒப்பான, உலகிலேயே மிகப்பெரிதான 'நீப்பர் அணை'யை எதிரிகள் கைப்பற்றிக்கொள்வர் என்று நிச்சய மாய்த் தெரிந்தவுடனே, இமைப்பொழுதில் அந்த அணையைத் தகர்த்துவிடுமாறு ஆக்ஞாபித்த வீரதீரச் செயல் ஸ்டாலினுடைய தயங்காத திடசித்தத்திற்கு ஓர் அற்புத எடுத்துக்காட்டாகும்.

ஸோவியத் யூனியனிலிருக்கும் ஒரு சாதாரணத் தொழிலாளியின் வாழ்க்கையைப் போலவே, ஸ்டாலின் தம் குடும்ப வாழ்க்கையையும் நடத்துகிறார். டிப்லிஸ் தொழிற்சாலையில் வேலை செய்துகொண்டிருந்த அவருடைய குமாரர் யாஷா, இப்பொழுது தம் நாட்டு விடுதலைக் காக, ஜெர்மானியரை எதிர்த்துப் போர் புரிந்துகொண்

டிருக்கிறார். இவர் ஸ்டாலினுடைய முதல் மனைவியின் புத்திரர். 17-வயதுள்ள நத்யா என்னும் மாதை, 1919-ல் ஸ்டாலின் மறுமணம் செய்துகொண்டதின் மூலம் பிறந்த வாஸிலி என்ற குமாரனுக்கு இப்பொழுது 21-வயதும் ஸ்வெட்லானா என்ற பெண்ணுக்கு 17-வயதும் ஆகின்றன. வாஸிலி ஒரு தொழிற்சாலையில் உழைத்து வருகிறான். உலக நிலப்பரப்பின் ஆறில் ஒரு பங்கு விஸ்தீரணமுள்ள ரஷ்ய தேசத்தின் தலைவருடைய மனைவி தாம் என்று நத்யா கர்வங்கொள்வதில்லை. ஜனங்களும் அந்த முறையில் அவரைக் கௌரவிப்பதுமில்லை. ஸ்டாலினை மணந்த பிறகு அந்த அம்மையார், மாஸ்கோவில் தம் குடும்ப வாழ்க்கையைத் தொடங்கி, சமீபத்திலிருந்த பட்டுத் தொழிற்சாலை ஒன்றில் ஒரு சாதாரணத் தொழிலாளியைப் போலவே தாமும் வேலை பார்த்துவந்தார். அவர் தெய்வபக்தியும் மத வைராக்கியமும் மிகுந்தவர். அவருடைய கொள்கைக்கு ஸ்டாலின் எவ்வித இடையூறும் செய்யாமல் அநுமதித்தே வந்தார். கடைசியாக, நத்யா 1932-ல் இறந்துபோகவே, அவருடைய மதக் கொள்கைகளுக்கு விரோதமில்லாமல் வைதிகச் சடங்குகளுடன் அவர் உடல் அடக்கம் செய்யப்பட்டது.

மாஸ்கோவில் கிரெம்லின் என்ற இடந்தான் ரஷ்ய அரசாங்கத்தின் தலைமை ஸ்தானம். அங்கே முன்னால் ஜார் காலத்தில் வசித்துவந்த அரண்மனைப் பணிப்பெண் ஒருத்தியின் சிறு வீட்டிலேயே ஸ்டாலின் தன் மகளோடு வசித்துவருகிறார். இந்த வீட்டில் இரண்டு அறைகளே உண்டு. இது மாரிகால வாசஸ்தலம். மாஸ்கோவுக்குச் சில மைல்களுக்கு அப்பால் மஸ்க்வா நதிக் கரையிலுள்ள

'கோர்க்கி' என்னும் வீட்டில், அவர் வேனிற் காலத்தில் வசிப்பது வழக்கம். அவர் அதிகாலையிலிருந்து இரவில் வெகுநேரம் வரையிலும் வேலை பார்ப்பார். அவருடைய வேலை நேரத்தில் பெரும் பகுதி கிரெம்லினிலுள்ள சர்க்கார் காரியாலயத்திலும், சிறு பகுதி நகரத்திலுள்ள கட்சியின் தலைமைக் காரியாலயத்திலும் கழிகிறது. வேலை நேரங்களில் அவருக்கு எவ்வித இடையூறும் இருக்கவே கூடாது. ஆதலால், அவருக்கு வரும் டெலிபோன் அழைப்புகள் யாவற்றையும் காரியதரிசிகளே கவனித்துக் கொள்வர். பொதுஜனப் பேட்டிகள் மிகச் சுருக்கமாகவே இருக்கும். எப்பொழுதாவது அவர் பேட்டிக்கு இசைந்து அநுமதி கொடுத்துவிட்டால், அப்பொழுது கேட்க வேண்டிய கேள்விக் குறிப்புகளை ஒரு மாணவன் பரீட்சைக்குப் பிரயாசைப்பட்டுப் படிப்பதைப்போல் சிரமப்பட்டுத் தயாரிப்பார். ஒரு முறை அமெரிக்கத் தொழிலாளர் பிரதிநிதிகளுக்குப் பேட்டியளித்து, அவர்கள் கேட்ட கேள்விகளுக்கு நான்கு மணி நேரம் பதில் கூறிக்கொண்டிருந்தார். இறுதியாக, அந்தப் பிரதிநிதிகளின் குறுக்குக் கேள்விகள் முடிந்ததும், "நானும் அமெரிக்காவைப்பற்றிய சில விவரங்களை அறிய ஆசைப்படுகிறேன்" என்று அவர் மெதுவாக ஆரம்பித்து, இரண்டு மணி நேரம் அவர்களைக் கேட்ட கேள்விகளிலிருந்து, அமெரிக்காவைப்பற்றிய மிக நுணுக்கமான விஷயங்களைக் கூட அவர் தெரிந்துகொண்டிருப்பதைக் கண்ட பிரதிநிதிகள் அவரைப் பெரிதும் வியந்து பாராட்டினர்.

ஸ்டாலின் பொதுஜன விழாக்களில் அநேகமாகக் கலந்து கொள்வதில்லை. அவருடைய சொற்பொழிவுகள்

தக்க ஆதாரங்களுடனும் அர்த்த புஷ்டியுடனும் இருக்கும். வெறும் சொல் நயத்தை அவைகளில் காணமுடியாது. கட்சி நடவடிக்கைகளைப்பற்றி ஒரு காரியதரிசி வாசிக்கும் அறிக்கைகளைப்போல் அவை மிக நீளமாயிருக்கும். அவர் தம்மை ஆடம்பரப்படுத்திக்கொண்டதே இல்லை. இன்றும் ஒரு 'விசித்திர ஜார்ஜிய'ராகவே அவர் விளங்குகிறார். பகல் முழுதும், அவர் சலியாது உழைத்துக்கொண்டும் சுங்கானைக் கையில் பிடித்துப் புகைத்துக்கொண்டும் தம் குழந்தைகளின் நடுவே, குளிர்காயும் நெருப்புத் தணலைக் கிண்டிக்கொண்டும், வாழ்க்கையின் ஒவ்வொரு நாளையும் மனத்திருப்தியோடு நிம்மதியாகக் கழிக்கிறார். அவர் நெடுங்காலம் வாழட்டும்.

முற்றும்

